# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

லர் 34 ]    இராக்ஷச ஆண்டு ஐப்பசித்திங்கள் 10—11—75    [ இதழ் 1

## கந்தஷஷ்டி விழாவில்



திருச்செந்தூர்

ஸ்ரீ அறுமுகப்பெருமானுக்குச் சிறப்பு வழிபாடு

தருமையாதீனக்குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

# "ஞானசம்பந்தம்"

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 34 | 10-11-75 | இதழ் 12

## உட்பொருள்





உ

குருபாதம்

## ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு

இறந்தும் பிறந்தும்
இளைத்தேன் இனியான்
மறந்தும் பிறவா
வரம்தா — சிறந்தபுகழ்
ஞாலவா யாமுடிக்கு
நாட்டுசூ ளாமணியாம்
ஆலவாய்ச் சொக்கநா
தா.

–சொக்கநாத வெண்பா–10.

ஆசிரியர் :-

வித்துவான்

இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள்

துணையாசிரியர் :-

மகாவித்துவான்

சி. அருணைவடிவேல் முதலியார்

உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 34 | இராக்ஷச - ஐப்பசி - 10—11—75 | இதழ் 12

திருச்சிற்றம்பலம்

பொன்றயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்றயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினுய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. — சம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்

## அருளொளிக் காட்சி

சைவ சமயத்திற்கு உள்ள பல சிறப்புக்களில் ஒன்று, 'கிரியை' எனப்படுகின்ற வழிபாட்டுமுறைகள் பலவும் 'ஞானம்' எனப்படுகின்ற தத்துவ நெறியைப் பற்றியனவாகவே அமைந்திருத்தலாகும்.

"கிரியையென மருவும் அவையாவும்
ஞானங் கிடைத்தற்கு நிமித்தம்"

என்பது உமாபதி தேவர் வாக்கு. சைவ சமயத்தின் இந்த நெறி முறைகளின் அமைப்பை உணர்ந்த தாயுமான அடிகள்,

"சன்மார்க்க ஞானமதின் பொருளும்வீறு
சமயசங்கே தப்பொருளுந் தான் ஒன்ருகப்
பன்மார்க்க நெறியினிலுங் கண்டதில்லை"

என்று வியந்து பாடினர்.

இம்முறையில் சொல்லப்பட்டவை பலவற்றுள், " அண்ட பிண்டம் அவை சமம் " என்பது முதலாவது. அதாவது, ' அண் டத்தில் உள்ளதுதான் பிண்டத்தில் உள்ளது ; பிண்டத்தில் உள்ளதுதான் அண்டத்தில் உள்ளது ' என்பதாம். (அண்டம் - உலகம் ; பிண்டம் - உடம்பு. ) சிவபூசை முறையில் அக வழி பாட்டில் ஆசனமாக உள்ள இருதய கமலத்தை, அதன் தண்டினை ஆன்ம தத்துவங்களாகவும், இதழ்களை வித்தியா தத்துவங்க ளாகவும், பொகுட்டு கேசரம் முதலிய உட்பகுதிகளைச் சிவ தத்து வங்களாகவும் கூறியிருப்பதும் மேற்குறித்த உண்மையை நன்கு விளக்குவதாகும். யோக பாதத்தில் இந்த முறை இன்னும் நுட்பமாக அமைந்துள்ளது.

இம்முறையில் பலரும் நன்கறிய விளங்குவன சிவதலங்களின் அமைப்புக்கள். உலகத்திற்கு மூலப் பொருளாய் உள்ளவை பஞ்ச பூதங்கள்.

" நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்தும்
கலந்த மயக்கம் உலகம் "

என்று தொல்காப்பியநம் கூறினர். இந்தப் பஞ்ச பூதங்களின் வடிவாக ஐந்து சிவ தலங்கள் உலகில் அமைந்து விளங்குவதை யாவரும் அறிவர்.

பிருதிவித் தலம் திருவாரூர். (காஞ்சியையும் சொல்வது உண்டு) திருவாரூரில் மூல மூர்த்தி புற்றுருவில் அமைந்தது. (காஞ்சியில் மூல மூர்த்தி மணல் இலிங்கம்) அப்புத் தலம் திருவானைக்கா. இங்கு மூலத்தானம் நீர் ஊற்று. தேயுத்தலம் திருவண்ணாமலை. இங்கு மூர்த்தி அக்கினி மலை. வாயுத்தலம் திருக்காளத்தி. வாயு கட்புலனாகாதது. ஆதலால், இங்குக் கரு வறையில் விளக்கு ஓயாது அசைந்துகொண்டு இருத்தலைக் கொண்டு வாயுவின் உண்மையை உணர்கின்றோம். ஆகாயத் தலம் சிதம்பரம். அம்பரம் - ஆகாசம். இப்பெயரே இதன் உண்மையைத் தெரிவிக்கின்றது. கூத்தப்பெருமான் எழுந் தருளியுள்ள சபை சிதாகாச வெளியே. ' ஆகாச லிங்கம் ' என்ற ஓர் இலிங்கமும் அங்கு உள்ளது. எனவே, சிவத்தலங்கள் பலவற்றுள் இப் பஞ்சபூதத் தலங்கள் சிறப்புற்று விளங்குவன வாகும். பஞ்ச பூதங்களுள் ஆகாயம் உயர்ந்ததாதலின், தலங் களுள் சிதம்பரம் தலையானதாய் விளங்குகின்றது.

பஞ்ச பூதங்களில் ஆகாயத்திற்கு அடுத்த சிறப்புடையது தேயு. அதாவது அக்கினி. ஆகாயம் உயர்ந்ததாயினும், அஃது அருவமாய் இருப்பது ; கண்ணுக்குப் புலனாகாதது. அதனால்

சில மதவாதிகள், 'ஆகாயம்' என்று ஒரு பூதம் இல்லை என்றே சொல்லிக்கூட வாதிக்கின்றனர். 'வாயு' எனப்படுகின்ற பூதம், 'மெய்' என்னும் பொறிக்குப் புலனாகுமாயினும், கண்ணுக்குப் புலனாவதில்லை. கண்ணுக்குப் புலனாகாத பொருள்களோடு மக்களோ, பிற உயிர்களோ நெருங்கிய தொடர்பு கொள்ளுதல் இயலாததாகும்.

'நிலம், நீர்' என்னும் இரண்டு பூதங்களும் உருவப் பொருள்கள். அதனால் அவை, உருவமுடைய மற்றைய பொதுப் பொருள்களில் சிலவாகக் கருதப்படுகின்றனவன்றி, உயர்ந்த பொருள்களாக எண்ணப்படுவதில்லை. இடையில் உள்ள 'தேயு' அல்லது 'அக்கினி' என்பது, எப்பொழுதும் எவ்வகையிலும் கண்ணுக்குப் புலனாகாமலே இருக்கின்ற அருவப் பொருளும் ஆகாமல், எப்பொழுதும் எளிதிலே கண்ணுக்குப் புலனாகிக் கொண்டிருக்கின்ற உருவப் பொருளும் ஆகாமல், சில பொழுது கண்ணுக்குப் புலனாவதும், சில பொழுது கண்ணுக்குப்புலனாகாமல் விறகு முதலியவற்றில் மறைந்து நிற்பதும் ஆகிய அருவுருவப் பொருளாய் உள்ளது. அதுமட்டுமன்று; நெருப்புப் புலனாகும் பொழுது ஒளிவடிவாய்த் தோன்றி இருளை ஓட்டிப் பொலிவு பெற்று விளங்குகின்றது. இதனாலேயே, பஞ்ச பூதங்களும் இறைவனுக்குப் பொது வகையில் வடிவமாயினும், தேயு அவனுக்குச் சிறப்பு வடிவமாகின்றது.

"பொங்கழல் உருவன் பூத நாயகன்"

என்பது ஞானசம்பந்தர் அருள் வாக்கு.

உண்மையில், அஞ்ஞானத்தைப் போக்குகின்ற ஞானமே வடிவாயுள்ள இறைவனை, இருளை ஓட்டுகின்ற ஒளி வடிவின னாகவே பெரியோர்கள் காண்கின்றனர்; கூறுகின்றனர்.

"சோதியே! சுடரே! சூழொளி விளக்கே"

"ஒளி வளர் விளக்கே"

என்பன போன்ற அருட்டிருமொழிகள் நினைக்கத்தக்கன.

இத்தகைய தேயுத் தலம் திருவண்ணாமலை ஆதலின், அது மேற்கூறிய வகையில் பல வகைச் சிறப்புக்களையும் பெற்று விளங்குகின்றது. இங்குச் சிவபெருமான் பிரம விட்டுணுக்களது போரினை ஒழித்தற் பொருட்டுக் கொண்டு நின்ற அக்கினித்தம்ப உருவம், புறத்தில் ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெருஞ் சோதியாய் விளங்கியது மட்டுமன்றி, பிரம விட்டுணுக்களது அகத்தில்

இருந்த பாசஞான பசுஞானங்களாகிய இருளையோட்டும் பதி ஞானமாகிய ஒளியாகவும் விளங்கிற்று. ஆகவே அண்ணமலை, புறத்தில் அக்கினிப் பிழம்பாய் இருப்பினும், உண்மையில் ஞானப் பிழம்பே என்பது விளங்கும். இதுபற்றியே இத்தலத் திருப்பதிகத்தில் திருஞானசம்பந்தர், இறைவனை, "ஞானத் திரளாய் நின்ற பெருமான்" என்றும்,

"நல்ல அடியார் மேல்
ஊனத் திரளை நீக்கு மதுவும் உண்மைப்பொருள் போலும்"

என்றும் அருளிச்செய்தார். நாவுக்கரசரும் இத்தலப் பெருமானை,

"ஓதிமா மலர்கள் தூவி உமையவள் பங்கா, மிக்க
சோதியே, துளங்கும் எண்தோள் சுடர் மழுப் படையினனே"

என்பதில், "மிக்க சோதி" என்று அருளினர். "மிக்க சோதி" என்பது, 'பெரிய ஒளி' என்று மட்டும் பொருள் தந்து நில்லாமல், 'உலகில் உள்ள ஒளிகள் யாவற்றினும் மேம்பட்ட - அஃதாவது அஞ்ஞானமாகிய அக இருளை ஓட்டுகின்ற ஞான ஒளி' என்றும் பொருள்தந்துநிற்கின்றது. 'ஞானம்' எனினும், 'அருள்' எனினும் ஒன்றே. அதனால், ஞான ஒளியாவது அருள் ஒளியே.

இறைவனைப் பற்பல வடிவங்களில் கண்டு வழிபடுகின்ற மக்கள், அவனை ஒளி வடிவில் கண்டு வழிபடுதற்கு அமைந்த நாள் இருக்கார்த்திகைத் திருநாள் - கார்த்திகைத் திங்களில் கார்த்திகை நாண்மீன் கூடுகின்ற நன்னாள். அந்நாளில் நாடெங்கும் ஒளிமயமாய்க் காணப்படும்; ஆலயங்கள் யாவும் ஒளிமயமாய்க் காட்சியளிக்கும். அஃதாவது, எங்கும் அளவற்ற விளக்குகளால் அலங்காரம் செய்யப்படும். ஆலயங்களிலும் அன்று பெருமானுக்குத் தீபாலங்காரமே சிறப்பு வழிபாடாகும். இவ்விழா, 'விளக்கிட்டு விழா' எனப்படும். ஞானசம்பந்தரும்,

"கார்த்திகை நாள்.........தையலார் கொண்டாடும்
விளக்கிடு காணுதே போதியோ பூம்பாவாய்"

என்று பூம்பாவையை நோக்கி வினவியருளினர்.

ஐப்பசித் திங்களில் அமாவாசையை அணுகிப் பின்னிரவில் நிகழ்கின்ற தீபாவளி விழாவும் விளக்கீடாக இருப்பினும், அதை இறைவனது அருளொளிக் காட்சியாக மக்கள் கருதுவதில்லை. கார்த்திகைத் திங்களில் பௌர்ணிமை நாளில் சந்தியா காலமாகிய மாலை நேரத்தில் நிகழ்கின்ற தீபக் காட்சியையே மக்கள் இறைவனது அருளொளிக் காட்சியாகக் கண்டு அகம் உருகி வழிபடுகின்றனர். மேலும் கார்த்திகை விளக்கீடே தமிழ் நாட்டிற்குச் சிறப்பாக உரித்தாய் உள்ளது.

இக் கார்த்திகை விளக்கீட்டு விழா நாடெங்கும் நிகழ்வதாயினும், மேற்கூறிய தேயுத் தலமாகிய திருவண்ணுமலைக்குத் தனிச் சிறப்புடையதாய் விளங்குகின்றது. அக்கினி மலை இவ்யுகத்திற்கு ஏற்பக் கல்மலையாய்க் காணப்படுகின்ற இக்காலத்தில் அதன் உண்மை விளங்க இறைவன் வழங்குகின்ற அருட்காட்சி திருக்கார்த்திகைத் திருநாளில் அம்மலையின் சிகரத்தில் வழங்குகின்ற தீபக் காட்சியே. அதனுல், அந்தத் தீபக் காட்சியை அறிவுடையோர் ஞானதிபக் காட்சி யாக – அருளொளிக் காட்சியாகவே கண்டு அரும் பயன் எய்துவர். அனைத்துச் சிவாலயங்களிலும் அன்று 'சுட்கப் பனை' என்ற ஒன்று கொளுத்திக் காட்டப்படுவது இறைவன் அண்ணுமலையாய்த் தோன்றிய சோதி வடிவின் தோற்றத்தை நினைப்பிப்பதேயாகும்.

இத்தகைய அருளொளிக் காட்சி நாள் மிக அண்மையிலே வருவதால், அன்று எங்கும் யாவரும் இறைவனது அருளொளிக் காட்சியைக் கண்டு அன்பு மிக்கு வழிபடுதலோடு, இயன்றவர் அண்ணுமலையின் அருளொளிக் காட்சியை நேரில் சென்று கண்டு வணங்கியும், இயலாதவர், நினைக்க முத்தி தருவதாகிய அத்தலத்தை இயன்ற இடத்தில் இருந்து நினைத்து வழிபட்டும் இருமைப் பயனும் இனிது எய்துவார்களாக.

---

## கந்த சஷ்டி விழாவில் சிறப்பு வழிபாடு

திருக்கயிலாயபரம்பரைத் தருமையாதீனம் 25 ஆவது ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமணி அவர்கள் திருச்செந்தூருக்கு எழுந்தருளி கந்த சஷ்டி விழா நாட்களில் மோனத்தவமிருந்து ஸ்ரீ அறுமுகப் பெருமானுக்குச் சிறப்பு வழிபாடு நிகழ்த்தினுர்கள். அவர்கள் அருள்வழியைப் பின்பற்றிவரும் 26 ஆவது ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களும் ஸ்ரீ அறுமுகப் பெருமானுக்குச் சிறப்பு வழிபாடு நிகழ்த்தத் திருவுளங்கொண்டு ஆதீனத் திருக்கூட்டத்து அடியவர்களுள், திருக்கடவூர் தேவஸ்தானம் கட்டளைவிசாரணை, ஸ்ரீமத். திருநாவுக்கரசுத் தம்பிரான் சுவாமிகளையும், கண்காணிப்பாளர் ஒருவரையும் திருச்செந்தூருக்கு அனுப்பி சஷ்டி விழாவில் ஆறுநாட்களும் ஆதீனச் சார்பில் காலையில் விஸ்வரூப தரிசனத் திற்குப்பின்னர் விசேஷ அபிஷேக ஆராதனைகளும் சகஸ்ரநாம அருச்சனையும் நிகழ்த்துவித்தார்கள். தொடக்க நாளாகிய 4–11–75 செவ்வாய்க்கிழமை ஷண்முகார்ச்சனை நிகழ்த்தப் பெற்றது. நாள்தோறும் அன்பர்கள்பலர் தரிசித்து மகிழ்ந்தனர்.

---

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான

திருநின்றியூர் ஸ்ரீ லக்ஷ்மிபுரீசுவரர் திருக்கோயிலில் நடைபெற்ற

இரண்டாவது லட்சார்ச்சனை நிறைவு விழா,
நாள் வழிபாட்டு வைப்பு நிதித் தொடக்க விழா,
நந்தவனத் தொடக்க விழா, மின்விளக்கு ஏற்று விழாக்களில்

தருமையாதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்

வழங்கியருளிய

# ஆசியுரை

8—9—75

திருச்சிற்றம்பலம்

"வந்தோர் இந்திரன் வழிபட மகிழ்ந்து
வான நாடுநீ ஆள்கென அருளிச்
சந்தி மூன்றிலும் தாபரம் நிறுத்திச்
சகளிசெய் திறைஞ்சு அகத்தியன் தனக்குச்
சிந்து மாமணி அணிதிருப் பொதியில்
சேர்வு நல்கிய செல்வங்கண் டடைந்தேன்
செந்தண் மாமலர்த் திருமகள் மருவும்
செல்வத் தென்திரு நின்றியூரானே" — சுந்தரர்.

திருச்சிற்றம்பலம்

உலக நலங்கருதி வழிபாடு :

உலகம் முழுவதும் நலமுடன் வாழ்ந்தால்தான் ஒவ்வொரு தனிமனிதனும் மகிழ்ச்சியோடு வாழ முடியும். அருளாளர்களும் சான்றோர்களும் 'வையகம் துயர் நீங்கி வாழ்க' என வாழ்த்துவதைப் பார்க்கிறோம். உலக சுபிக்ஷத்திற்கு நாம் இறைவனைத்தான் பிரார்த்தனைசெய்யவேண்டும். அம்முறையில் உலகில் இன்று தோன்றியுள்ள அமைதியின்மை நீங்கவும் மழைவளம் பெருகி நன்மைகள் பலவும் உண்டாகவும் இரண்டு மாதங்களாக இத்திருநின்றியூர்த் திருக்கோயிலில் லக்ஷார்ச்சனை தொடங்கப் பெற்று இன்று இரண்டாவது லக்ஷார்ச்சனை நிறைவுபெறுகிறது.

அர்ச்சனை ஆராதனை முதலிய சிறப்பு வழிபாடுகளால் திருக்கோயில் விளக்கம் பெறும் என்னும் உண்மையை இக்கோயிலில் நடைபெற்ற வழிபாடு அன்பர்கள் பலருக்கும் உணர்த்தியுள்ளது. 'இக்கோயிலில் லக்ஷார்ச்சனை தொடங்கிய சிலநாட்களில் கோயில் சிறந்த விளக்கம் பெற்றுள்ளது. சுவாமி அம்பாள் திருவுருவங்கள் மிக்க ஒளி உருவோடு திகழ்கின்றன. அன்பர்கள் பலரும் இவ்வழிபாட்டினால் ஈர்க்கப்பட்டு வழிபாட்டிற்குவரத் தொடங்கியுள்ளனர்' என்பவற்றைப் பலரும் உணர்ந்து கூறுகின்றார்கள்.

## குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்தில் :

இறைவன் எங்கும் நிறைந்துள்ள பரம் பொருள் ஆயினும் அவன் அன்பர்களுக்கு அருள்செய்யக் கோயில்களில் உள்ள சிவலிங்க மூர்த்தத்திடையே வெளிப்படுகின்றான் நாம் அன்போடு வழிபடும்போதுதான், மூர்த்திகளில் அருள் வெளிப்பாடு உண்டாகும். பக்தி செய்து வழிபடும் அன்பர் ஒருசிலராக இருந்தாலும் அவ்வருள் வெளிப்பாடு நிகழத்தான்செய்யும்.

'குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்திலே' என்று கூறுவார்கள். 'நாம் அன்போடு கொண்டாடுவதைப் பொறுத்துத்தான் குழந்தையும் தெய்வமும் நம்மிடம் ஈடுபாடு கொள்கின்றன' என்ற பொருளை உணர்த்தும் இத்தொடர் சிறந்த உண்மையை உணர்த்துகின்றது.

## கடவுள் இயவுள் இறைவன் :

எல்லாம்வல்ல பரம்பொருளை நாம் கடவுள், இயவுள் இறைவன் என அழைக்கிறோம். கடவுள் என்ற சொல்லுக்கு இன்ப துன்பங்களைக் கடந்துநின்று உயிர்களைக் காப்பவர் என்பது பொருள். "துன்பமொடு இன்பமதெல்லாம் கடந்தவர் காதலில் வாழும் கற்குடி மாமலையாரே" என்பது ஞானசம்பந்தர்தேவாரம். இயவுள் என்பதற்கு-உயிர்களை வழிநடத்திச்செல்பவன் என்பது பொருள். திருமுருகாற்றுப்படையில் நக்கீரர் முருகனைப் 'பெரும் பெயர் இயவுள்' எனக்குறிக்கிறார். இறைவன் என்பதற்கு எங்கும் தங்கியிருப்பவன் என்பது பொருள். இறை என்பதற்குச் சிறிது எனவும் ஒரு பொருள் உண்டு. உலகமே வடிவமாய் விளங்கும் இறைவன் அணுவில் அணுவாகச் சிறியனாய் நின்றும் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கின்றான் எனவும் பொருள் கூறலாம்.

"அண்டங்கள் எல்லாம் அணுவாக அணுக்களெல்லாம்
பெரிதாய்ச் சிறிதாயினும்" [அண்டங்களாகப்

என்பது திருவிளையாடற் புராணம். கடவுள் இயவுள் இறைவன் என்ற இம் மூன்று பெயர்களும் சைவ சித்தாந்தத்தில் இறை

வனது மூன்று இயல்புகளைத் தெரிவிக்கும் பெயர்களாகவும் உள்ளன. இறைவன் ஒன்ருய் வேருய் உடனுய் இருந்து அருள் செய்பவன் என்பது சித்தாந்த மரபு. இறைவன் என்ற பெயர் - எங்கும் நிறைந்திருப்பவன் என்ற பொருளைத் தருவதால் அவன் ஒன்ருயிருக்கும் நிலையினைத் தெரிவிக்கிறது. கடவுள் - எல்லாப் பொருளையும் கடந்தவன் என்ற பொருளைத் தருவதால் அவன் வேருயிருக்கும் நிலையினைக் கூறுகிறது. இயவுள் - வழி நடத்து பவன் என்ற பொருளைத் தருவதால் அவ்விறைவன் உடனுயிருந்து உயிர்களை வழி நடத்திச் செல்லுபவன் என்பதைத் தெரிவிக்கிறது. இத்தகைய பரம்பொருளை நாம் இரு வகையில் வழி படுவதை இத்தலத் தேவாரத்தில் அப்பரடிகள் தெரிவிக்கிருர்.

இறைவழிபாட்டிற்குரிய காரணங்கள் :

ஆராய்ச்சியாளர்கள் அச்சத்தில்தான் கடவுள் வழிபாடு தொடங்குகின்றது என்று கூறுவார்கள். அறிவுடையவர்கள், காரிட்ட ஆணவக் கருவறையில் கட்டுண்டு ஆணவத்தோடு அத்துவிதமாய் இருளில் கிடந்த தன்னை விடுவித்துத் தனுகரண புவனபோகங்களைத் தந்து உண்மை ஞானம் சிறிதேபுலப்படுத்தி ஆட்கொள்ளும் இறைவனிடம் உண்மை அன்போடு அகம் குழைந்து பக்தி செய்வார்கள்.

சாதாரண நிலையில் உள்ளவர்களும் கீழ்மக்களும் அச்சம் காரணமாகக் கடவுளை வழிபடுவர். எனவே அன்பு அச்சம் ஆகிய இவ்விருவகை நிலையிலும் இறைவழிபாடு தொடங்கி நிகழ் கிறது. இதைத் திருநாவுக்கரசு சுவாமிகள்,

" அஞ்சி யாகிலும் அன்பு பட்டாகிலும்
நெஞ்சம் வாழி நினைதின்றி யூரை நீ
இஞ்சி மாமதில் எய்திமை யோர்தொழக்
குஞ்சி வான்பிறை சூடிய கூத்தனே "

என்று அருளிச் செய்கிருர்.

" இடர்களை யாரேனும் எமக்கிரங்கா ரேனும்
படரும் நெறிபணியா ரேனும் — சுடருருவில்
என்பருக் கோலத்து எரியாடும் எம்மானுர்க்கு
அன்பறு தென்னெஞ் சவர்க்கு "

என்பது பதினெராம் திருமுறை.

தகுதியைப்பெற அன்பு அடிப்படை :

தகுதி என்பது நம் மன வளர்ச்சியைப் பொறுத்திருக்கிறது. இளம் பருவத்தில் தந்தையோடு உடனிருந்து அவர் மீது ஏறி விளையாடி அவருக்கு முந்தி முந்திச் சென்ற பையன் அறிவு

வளர்ந்து வாலிபப் பருவத்தை அடைந்த பின்னர் தந்தைக்கு உரிய மரியாதைகள் தருவதையும் அவரைக் கண்டால் எழுந்து நிற்பதையும் முன்னிருத்திப் பின்னால்செல்வதையும் காண்கிறோம். அதுபோல நம் மன வளர்ச்சியினால் நாம் நம்மை உணர்ந்து இறைவனை ஆண்டானாகவும் நம்மை அடிமையாகவும் கருதும் மனநிலையினைப் பெறுகிறோம். இத்தகுதிகளைப் பெறுவதற்கு அன்பே அடிப்படையானது.

அன்பினால் மட்டுமே அவனை அடைய முடியும் :

அன்பு என்ற பண்பு ஒன்றால்தான் நாம் இறைவனைக் கவர முடியும். உணர்ந்தார்க்கும் உணர்வரியவனாக விளங்கும் அவ் இறைவன் பக்தி வலையில் படும் எளியவனாகவும் இருக்கின்றான். பகழிக்கூத்தர் என்னும்பாவலர் திருச்செந்தூர் முருகன்மீதுபாடிய பிள்ளைத்தமிழில் "பரிந்து மகிழ்ந்து வரவழைத்தால் வாரா திருக்க வழக்குண்டோ வடிவேல் முருகா வருகவே" என்று பாடுகின்றார். அதிகார பலத்தினாலோ பொருளாதார வசதியினாலோ நாம் இறைவனை அழைக்கவும் முடியாது; அடையவும் முடியாது. அன்பினால் மட்டுமே நாம் அவனை அடையமுடியும். வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும் தாழ்த்தச் சென்னியும் தந்துள்ள இறைவனை நாம் மனம் வாக்கு காயம் என்ற மூன்றாலும் தூயவர்களாய்ப் பக்தி செய்யவேண்டும்.

ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் உள்ளங்களை இறைவன் எழுந்தருளும் கோயில்களாக விளங்கச்செய்யவேண்டும். அன்பு ஒழுக்கம் ஆசாரம் முதலிய பண்புகளால் நம்மனத்தைத் தூய்மை அடையச்செய்யவேண்டும். பின்னர் நாடோறும் நாம் செய்யும் வழிபாடுகளால் இறைவனை நம்உள்ளத்தில் எழுந்தருளுவித்துப் போற்றும் நிலைக்கு நம்மை உயர்த்திக்கொள்ளவேண்டும். அப்பர் சுவாமிகள்,

"தேடிக் கண்டுகொண்டேன் – திரு மாலொடு நான்முகனும்
தேடித் தேடொணாத் தேவனை யென்னுள்ளே தேடிக் கண்டு
[கொண்டேன்"

"நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன்"

என்பனபோன்ற தேவாரத் தொடர்களால் இவ்வுண்மையை உணர்த்தியருளுகின்றார்.

கடவுள் வழிபாடு :

நல்வினை உடையவர்களே கடவுளை உணர்ந்து பக்தி செய்வர். தீவினை உடையவர்கள் கடவுளை வழிபடமாட்டார்கள். அவர்கள் வழிபட நினைத்தாலும் அவர்கள்வினை அவர்களை

எவ்வாறேனும் தடுக்கும். "கொடுவினையார் என்றும் குறுகா அடி" என்று கூறியருளுகின்றார் அப்பர். சுந்தரர் வட திருமுல்லை வாயில் திருப்பதிகத்தில் அன்றும் இன்றும் என்றும் நல்லவர் களுக்கே கடவுளை வழிபடும் வாய்ப்புக் கிடைக்கும் என்னும் பொருளில்,

"என்றும் நல்லவர் பரவும் திருமுல்லை வாயிலாய்"

என்று பாடியருளுகின்றார். குமரகுருபர முனிவர், "அகந்தைக் கிழங்கை அகழ்ந்தெடுக்கும் தொழும்பர் உளக்கோயிற்கு ஏற்றும் விளக்கே" என்று மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் குறிப்பிடு கின்றார். நாடோறும் மக்கள் தங்களுக்கு இயன்ற ஏதாவது ஒரு வேளையில் திருக்கோயில் வழிபாடு செய்யவேண்டும். ஒவ்வொரு சிவாலயங்களிலும் ஆறுகால பூசைகள் நடைபெறுகின்றன. திருப்பள்ளியெழுச்சி, காலை, நண்பகல், மாலை, இரண்டாம்யாமம், அர்த்தயாமம் என்ற ஆறு வேளைகளில் இறைவனுக்கு ஆரா தனைகள் நிகழ்கின்றன. இறைவன் ஒவ்வொருநாளும் ஆறு முறை அன்பர்கள் தன்னை வழிபட்டுக் கடைத்தேற சந்தர்ப்பம் அளிக்கின்றான். ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருபொழுது ஓழி வாக அல்லது வாய்ப்பாக இருக்கலாம். ஒருவேளையிலாவது தவறாமல் திருக்கோயில் வழிபாடு செய்யவேண்டும்.

**வீரம், கல்வி, செல்வம் :**

உலக வாழ்க்கைக்கு வீரம் கல்வி செல்வம் இம் மூன்றும் இன்றியமையாதன. இம்மூன்றையும் அருளும் தெய்வங்கள் இந் நாட்டின் கிழக்கு மேற்கு தெற்கு ஆகிய மூன்று திசைகளிலும் விளங்குகின்றன. வீரம் தருவது கொற்றவை அல்லது காளி. இந்நாட்டின் கீழ்ப்பகுதியாகிய கல்கத்தாவில் காளி வழிபாடு சிறப்பாக மக்களால் கொண்டாடப்பெறுகிறது. செல்வம் தரும் தெய்வம் திருமகள். நம்நாட்டின் மேற்குப் பகுதியில் பம்பாய் நகரில் மகாலக்ஷ்மி வழிபாடு சிறப்புற நடைபெறுகிறது. கலை நலம்தரும் தெய்வம் கலைமகள். தென்னாடு கலைமணம் கமழும் திருநாடு. இந்நாடு முழுதும் கலைமகள் எழுந்தருளிக் கலை நலங்கள் வழங்கியருள்கின்றாள். அறிவு விளக்கம் தென்னாட்டில் சிறப்புற அமைந்திருப்பதற்குக் கலைமகள் இந்நாட்டில் குடி கொண்டிருப்பதே காரணமாகும். வீரம் கல்வி செல்வம் ஆகிய மூன்று நலங்களையும் இறைவன் திருவருள் நமக்குத்தரும்.

"சினமலிகரியுரி செய்தசிவன் உறைதரு திருமிழலையைமிகு
தனமனர்சிரபுர நகர்இறை தமிழ்விர கன துரையொருபதும்
மனமகிழ்வொடுபயில் பவர்எழில் மலர்மகள் கலைமகள்சயமகள்
இனமலிபுகழ்மகள் இசைதர இருநில னிடையினிதமர்வரே"

என்பது திருஞானசம்பந்தர் தேவாரம்.

திருநின்றியூர் :

திருமகள் தனக்கு எல்லா நலங்களும் தருமாறு வேண்டி இறைவனைப் பூசித்து நலம்பல பெற்ற சிறப்புடைமையால் இத் தலம் திருநின்றியூர் எனவும் லக்ஷ்மிபுரம் எனவும் வழங்கப் பெறுகிறது. இங்குள்ள பெருமான் திருப்பெயர் ஸ்ரீ லக்ஷ்மி புரீசுவரர். அம்பிகை உலகநாயகி. மூவர் தேவாரத் திருப்பதிகங் களையும் பெற்றது இத்தலம். பரசுராமன் 360 வேலி நிலமளித்துப் பக்தி செய்து வழிப்பட்ட வரலாற்றைச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் குறிப்பிட்டருள்கின்றார்.

"மொய்த்த சீர் முந்நூற்றறுபது வேலி
மூன்றுநூறு வேதிய ரொடுநுனக்கு
ஒத்த பொன்மணிக் கலசங்கள் ஏந்தி
ஓங்குநின்றியூரென் றுனக்களிப்பப்
பத்திசெய்தவப் பரசுராமற்குப்
பாதங்காட்டிய நீதிகண்டடைந்தேன்
சித்தர் வானவர் தானவர் வணங்கும்
செல்வத் தென்திரு நின்றியூ ரானே."

இத்தகைய பெருஞ்சிறப்பிற்குரிய இத்தலம் 1955இல் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் அருளாட்சிக் காலத்தில் திருப்பணி கள் செய்யப்பெற்று அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம் செய் விக்கப்பெற்றது. இக்கோயிலுக்குச் சொந்தமான விளை நிலங்கள் மிகக் குறைவு. வைத்தீசுவரன்கோயில் என வழங்கப்பெறும் புள்ளிருக்குவேளூர்த் திருக்கோயிலோடு இணைக்கப்பெற்று பூசை வழிபாடுகள் செய்விக்கப்பெறுகின்றன.

நாள்வழிபாட்டுத் திட்டம் :

புள்ளிருக்குவேளூர்த் திருக்கோயிலுக்குரிய விளை நிலங்களில் கிடைக்கும் வருவாயும் குறைந்துவருகிறது. இந்நிலையில் அக் கோயிலோடு இக்கோயிலை இணைத்துப் பூசனைகள் நடத்துவதில் பலவகை இடர்ப்பாடுகள் ஏற்படுகின்றன. இந்நிலையில் இந்தக் கோயில் வழிபாட்டிற்கு என நாள் வழிபாட்டுத் திட்டம் ஒன்று தொடங்கப்பெறுகிறது.

மகாலக்ஷ்மி வழிபட்டு அருள்பெற்ற இத்தலத்து இறைவனை வழிபடுவோர் லக்ஷ்மிகடாக்ஷம் பெற்று நீடுவாழ்வர். ஆகையால் இத்தலத்து இறைவனை அன்பர்கள் வழிபாடு செய்வதற்கு வாய்ப்பாக இத்திட்டம் அமைக்கப்பட்டுள்ளது.

பரசுராமன் நாள் ஒன்றுக்கு ஒரு வேலி நில வருவாயினால் வழிபாடு செய்யும் வகையில் 360 வேலி நிலமும் வேதமோதுவ தற்கு 300 அந்தணர்களையும் அளித்தான் அல்லவா? அதை நினைவுகூர்ந்து இத்திட்டம் வகுக்கப்பெற்றுள்ளது. அன்பர்கள் ரூ. 360 செலுத்தினால் அதனை மூலதனமாகவைத்து அதில்

கிடைக்கும் வட்டித் தொகையைக்கொண்டு ஆண்டில் ஒருநாள் அவர்கள் பெயரில் இறைவனுக்கு வழிபாடு செய்விக்கும் இத் திட்டத்தை இன்று தொடங்கிவைக்கிறோம். 365 அன்பர்கள் இதில் ஈடுபட்டால் ஆண்டு முழுவதும் பூசைகள் வழுவாது நிகழ்தற்கு வாய்ப்பு ஏற்படும். நாடு முழுதும் லக்ஷ்மி கடாக்ஷம் பெருகும். அன்பர்கள் பலரும் இதில் ஈடுபட்டு அருள்நலம் பெறுவார்களாக,

நந்தனவனத் தொடக்கவிழாவும் மின்விளக்கு ஏற்றுவிழாவும்:

திருநின்றியூர் இறைவனைப் பணிபவர் அச்சம் பாவம் கேடு நோய் இல்லாதவராய் நலமுடன் வாழ்வர் என்று ஞானசம்பந்தர் அருளிச் செய்கின்றார். இத்தகைய திருநின்றியூரில் உலக நன்மைகள் பலவும் வேண்டிச் செய்த இவ்வழிபாடு அன்பர் களுக்கு விழுமிய பயன்களை விளைவித்துள்ளன.

" விளக்கினார் பெற்ற இன்பம் மெழுக்கினால் பதிற்றியாகும்
துளக்கில் நன்மலர் தொடுத்தால் தூய விண்ணேறலாகும்
விளக்கிட்டார் பேறுசொல்லின் மெய்ஞ்ஞெறி ஞானமாகும்
அளப்பிலகீதம் சொன்னார்க்கு அடிகள்தாம் அருளுமாறே "

என்று கூறியருளுகிறார் அப்பரடிகள்.

இத்திருப்பாடலில் கூறும் இரண்டு திருப்பணிகள் இன்று நிறைவேற்றப்படுகின்றன. திருநந்தனவனம் அமைத்து இறை வனுக்கு நறுமலர்கள் அணிவிக்கச் செய்வது சிறந்த பணி. இத்திருக்கோயிலுக்கு நல்ல நந்தனவனம் ஒன்று அமைக்கும் பணி இன்று தொடங்கிவைக்கப்பெறுகிறது.

வழிபாடு செய்ய வருவோர்க்கு வசதியாக மின்விளக்கு வசதிகள் செய்விக்கப்பெற்று இன்று ஏற்றிவைக்கப்பெறுகிறது. அன்பர்கள் பலரும் பக்தி நெறியில் ஈடுபட்டுத் திருக்கோயில் களைப் பேணியும் போற்றியும் சமயநெறிகளைக் கடைப்பிடித்தும் சிறந்து வாழ்வார்களாக.

இக்கோயிலில் நடைபெற்ற இரண்டு லக்ஷார்ச்சனைகளிலும் இவ்வூர்க் கிராமமக்களும் அருகில் உள்ள கிராமங்களில்வாழும் அன்பர்களுமே பெரும்பாலும் பங்குகொண்டு அர்ச்சனைகள் செய் வித்துள்ளார்கள். அவர்களது பக்தி உணர்வைப் பாராட்டி அவர்கட்கு எல்லா நலங்களும் பெருகிட வாழ்த்துகிறோம். இன்றைய விழாவில் பங்கு கொண்டு நந்தனவனத்தைத் தொடங்கி வைத்த இந்து சமய அறநிலையத்துறை உதவி ஆணையர் திரு. என். சீனிவாசன் அவர்கட்கும், மின்விளக்குகளை ஏற்றி வைத்த மாயூரம் கோட்டாட்சித் தலைவர் திரு. ஆர். வீரராஜு அவர்கட்கும், கலந்துகொண்டு சிறப்பித்த அன்பர்கள் பலருக்கும் எல்லா நலங்களும் உண்டாகச் செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

# நாற்றிசை வள்ளல்

திரு. என். இராமகிருஷ்ண

## உத்தர மாயூரம் :

இது துலா மாதம். துலா மாதம் மாயூரத்தில் மிகவும் விசேஷமாகக் கொண்டாடப்படுகிறது. முப்பது நாட்களும் எல்லாக் கோயில்களில் உள்ள மூர்த்திகளும் வீதி உலா வருவது உண்டு. கடைசிப் பத்து நாட்களும் மிகவும் விசேஷம். மாயூர நகரத்தின் நான்கு திக்குகளிலும் நான்கு வள்ளலார்கள் உள்ளார்கள். அம்மூர்த்திகளை இம்மாதத்தில் தரிசனம் செய்தால் மிக்க பலன் உண்டு.

முதன் முதலாக மாயூரம் வள்ளலாரைத் தரிசிப்போம். உத்தர மாயூரத்தில் எழுந்தருளியுள்ள பெருமான் வள்ளலார் என்றும் வதான்யேசுவரர் என்றும் வழங்கப்பெறுகின்றார். இப் பெருமானைத் தரிசனம் செய்துகொண்டு விருஷப தீர்த்தத்தில் ஸ்நானம் செய்பவர்கள் பிரம்ம ஞானத்தை அடைவர் என்று புராணங்கள் கூறுகின்றன.

முற்காலத்தில் தர்மம் விருஷப ரூபத்தில் சிவபெருமானைச் சுமந்து கொண்டு எல்லா இடங்களுக்கும் சென்றது. அதனால் அதற்குச் செருக்கு ஏற்பட்டது. " என்னால் தான் சிவபெருமான் சிறப்புற்றிருக்கின்றார் எனக்கு நிகரானவர் இல்லை " என்று இறுமாப்புற்றது. சிவபெருமான் " என் வாகனமாக இருப்பதால் தான் உனக்குப்பெருமை; கர்வம் கொள்ளாதே " என்று சொல்லித் தன் ஜடையிலிருந்த ஒரு ரோமத்தை அதன் முதுகில் வைத்தார். அதன் பாரத்தால் விருஷபம் களைத்து மூர்ச்சித்தது. பின்பு தெளிந்து எழுந்து வணங்கியது. அப்போது, சங்கரர் ' உன் கர்வத்தால் என்னை அவமதித்த பாபம் நீங்கப் பூ உலகம் சென்று தவம் புரிவாயாக. பின்பு சுத்தனாகி என்னை வந்து அடைவாய்' என்றுகூறினார். 'எங்குச்சென்று ஸ்நானம்செய்யவேண்டும்' என்று நந்தி கேட்க, ' உத்தர மாயூரம் சென்று தக்ஷிணாமூர்த்தி திருஉருவிலுள்ள நம்மைக் காவிரியில் பிரதிதினமும் மூன்று வேளையும் ஸ்நானம் செய்து பூஜைசெய்க' என்றும், 'துலாமாதம் அமாவாசையன்று நடுப்பகலில் காவிரியில் கங்கை முதலிய தீர்த்

தங்களும் வந்து கலக்கும். அப்போது உனக்கு ஞானத்தைப் போதிப்போம்' என்றும் சிவபெருமான் கூறினுர்.

நந்தி உத்தரமாயூரம் வந்து காவிரியில் மூழ்கி வதான்யேசுவரர் என்ற வள்ளலாரைப் பூஜித்தது. எனவே இத்தீர்த்தத்திற்கு விருஷப தீர்த்தம் எனப் பெயர் ஏற்பட்டது.

சிவபெருமான் நந்தியின் பூஜையை ஏற்று மகிழ்ந்து காட்சி கொடுத்து வரம் கேட்கும்படி பணித்தார். விருஷபம் 8 சுலோகங்களால் பகவானைத் தோத்திரம் செய்தது. சிவபெருமான் வேண்டிய வரங்களை அருளினுர். பின்பு "சிவதத்வ விவேகம்" என்னும் ஞானத்தையும் உபதேசித்தார்.

மாயூரநாதர் எப்படி நாற்றிசை வள்ளலில் ஒருவர் ஆனுர் என்று ஆராய்வோம். முப்புரங்களை எரிக்கச் சிவபெருமான் தீக்கணை ஒன்று ஏவினுர். முப்புரங்கள் வெந்து சாம்பல் ஆயின. இந்திரன், பிரமன், திருமால் ஆகியோர் அக்கணையைத் தேடிப் புறப்பட்டனர். காவிரியின் வடகரையை அடைந்தனர். காவிரியில் நீர்ப் பெருக்காக இருந்தது. வழி தெரியவில்லை. மாயூரநாதர் வேடன் வடிவில் வந்து யாது வேண்டுமென்று கேட்டார். திரிபுரம் எரித்த அம்பு வேண்டும் என்றனர். வேடர் உருவில் வந்த பெருமான் அவர்களை அழைத்துச்சென்றுர். பின்பு திடீர் என்று வேடனைக் காணவில்லை! அங்கு இலிங்கம் ஒன்றையும், அம்பையும் கண்டார்கள்.

இடபத்திற்கு அருள்செய்த வடதிசை வள்ளல் மோன முத்திரையைக் காட்டி உண்மை ஞானத்தை அடியவர்களுக்கு அருள்கின்ற தன்மையால் கைகாட்டும் வள்ளல் என்று வழங்கப் பெறுகின்றுர்; உத்தரமாயூரம் என வழங்கப்பெறும் வள்ளலார் கோயிலில் எழுந்தருளியுள்ள பெருமான் ஸ்ரீ வதான்யேசுவரர். இத்திருக்கோயில் தருமையாதீன அருளாட்சியில் உள்ளது.

திருவிளநகர் :

கிழக்கே திருவிளநகரில் சிவபெருமான் துறைகாட்டும் வள்ளலாக உள்ளார். அருள்வித்தகன் என்னும் அந்தணன் இறைவனுடைய அருச்சனைக்காக மலர் பறித்துக்கொண்டு வருவது வழக்கம். இவனுடைய பெருமையை உலகுக்கு உணர்த்த இறைவன் திருவுளங்கொண்டான். ஒருநாள் மலர் பறித்துக் கொண்டு ஆற்றேடுவரும்போது ஆறுபெருகிற்று. தலைக்குமேல் தண்ணீர்வந்தும், பூக்கூடையைவிட மனமில்லாமல் மிகவும் கஷ்டப்பட்டுத் தண்ணீரில் நீந்திக்கொண்டிருந்தான். இவனுடைய அன்பையும் உறுதியையும் கண்ட இறைவன் இவனுக்குத் துறைகாட்டிக் கரையில் உள்ள விழலைப் பற்றிக் கரையேற விட்டார். அதனுல் துறைகாட்டும்வள்ளல் எனப் பெயர்பெற்ளுர்.

இதுகாரணமாக ஊருக்கு விழல்நகர் என்ற பெயர் ஏற்பட்டது. பின்பு விளநகர் ஆயிற்று. இங்குள்ள திருக்கோயிலும் தருமை யாதீன அருளாட்சியில் உள்ள திருக்கோயில்களுள் ஒன்ருகத் திகழ்கின்றது.

ஞானசம்பந்தப்பெருமான் மாயூரநாதரை வணங்கவந்த போது ஆற்றைக்கடக்கும் வழி எது என நாடி "இங்குத் துறை காட்டுவோர் யாரேனும் உளரோ" என்று எண்ணினர். இறைவன் வேடன் உருவம் கொண்டு வந்து அழைத்துப்போவ தாக ஆற்றில் இறங்கினன். காவிரி வெள்ளம் பாலருவாயர் பாதத்தளவேயாயிற்று தென்கரையேறிய திருஞானசம்பந்தர் வேடனைக்காணத் திரும்பினர். காணவில்லை! இத்திருத்தலம் திருவிளநகர். திருஞானசம்பந்தர் பாடிய பதிகம் ஒன்று உளது. இறைவன் பெயர் துறைகாட்டும்வள்ளலார். இறைவியார் பெயர் வேய்த்தோளியம்மை. தீர்த்தம் - காவிரிநதி. தலவிருட்சம் - விழல்.

பெருஞ்சேரி :

தெற்கே பெருஞ்சேரியில் சிவபெருமான் மொழிகாட்டும் வள்ளலாக உள்ளார். வாகீசர் என்றும் கூறுகின்றனர்.

இத்தலம் மாயூரம் தாலூகாவில் மாயூரத்திற்குத் தெற்கே ஐந்துகல் தொலைவில் உள்ளது. நாற்பத்தெண்ணாயிரம் முனி வர்கள் இங்கு வசித்ததால் இது பெரிய சேரி - பெருஞ்சேரி எனப் பெயர்பெற்றது. (சேரி - மக்கள் சேர்ந்திருக்கும் இடம்) வட மொழியில் இத்தலம் பிருஹத்சிரேணி என்று அழைக்கப்படுகின் றது. இறைவர் பெயர் வாகீசர். இறைவிபெயர் சுவாந்தரநாயகி. இறைவர் வியாழபகவானல் பிரதிஷ்டை செய்யப்பட்டவர்.

வியாழன் பெரிய ஞானி. வேதங்களை நன்கு கற்றவர். அவர் மனைவி தாரை அழகானவள். அப்போது குருகுலவாசம் செய்துகொண்டிருந்த சந்திரனுக்கும் தாரைக்கும் நட்பு ஏற்பட் டது. வியாழன் இதை உணர்ந்தார். சந்திரனை க்ஷயரோகத்தை அடையும்படி சாபமிட்டார். பித்துப்பிடித்து யாத்திரையாகப் புறப்பட்டார். பலதலங்கள்சென்று கடைசியாக இத்தலம்வந்தார். இலிங்கம் அமைத்து வழிபட்டார். ஹிருதய கமலத்தில் தேவி யைத் தியானித்து வெளிக்கொணர்ந்தார். பின்பு பன்னிரண்டு ஆண்டுகள் தவம் செய்தார். சிவபெருமான் தோன்றி மெய்ஞ் ஞானம் அருளினர். பின்பு மனைவி தாரையும் தூய்மை பெற்ருள். வியாழன் மாயூரம் வந்து வழிபாடு செய்தார். பின்பு பெருமான் கட்டளைப்படி பெருஞ்சேரி அடைந்து நற்கதி அடைந்தார். பெருமான் வாக்குவள்ளல்; வாகீசர் எனப் பெயர் பெற்ருர்.

மூவலூர் :

மேற்கே மூவலூரில் சிவபெருமான் வழிகாட்டும் வள்ளலாக அமர்ந்துள்ளார். மூவலூர் தமிழ் நாட்டின் முக்கியமான சிவதலங்களில் ஒன்று. மாயூரம் ஜங்ஷனுக்கு மேற்கே சுமார் ஒரு மைல் தூரத்தில் இருக்கின்றது. திருவாவடுதுறை மடாலயத்து ஆதி குருவான ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திக்கும், இராமாயணத்தைத் தமிழில் இயற்றிய கம்பரின் தந்தையாகிய குணதித்தருக்கும் இத்தலம் தாயகமாக விளங்கியது.

ஆதியில் இத்தலம் புன்னை மரங்கள் நிறைந்த வனமாக இருந்தது. இன்றும் தலவிருட்சம் புன்னை. இறைவன் திருநாமம் மார்க்கசகாயர். புன்னைமரத்தடியில் இலங்கும் மூர்த்திக்கு புன்னாக வனேசுவரர் என்று பெயர். முன்னொருகாலத்தில் இவரை ருத்ரன், அயன், அரி என்ற மூவரும் பூஜித்ததால் மூவரூர் என்ற பெயர் பெற்றது இத்தலம். பின்பு மூவலூர் என்று திகழ்கிறது. இத்தலத்திற்குவர அயனுக்கும், மாலுக்கும் ருத்ரமூர்த்தி கோலத்தில் அரனுர் வழித்துணையாக வந்ததால் வழித்துணைநாதர் எனப் பெயர்பெற்றார். இத்தலத்தில் மறைந்துகிடந்த சுயம்புலிங்கத்தை மாலவனும் மலரவனும் "வழிகாட்டிய வள்ளலே" என்று துதித்ததனால் இவருக்கு இப்பெயர் ஏற்பட்டது.

துலாமாதத்தில் மாயூரம் வரும் அன்பர்கள் இந்த நான்கு தலங்களையும் தரிசனம்செய்து நாற்றிசை வள்ளல்களையும் கண்டு நற்பயன் பெறுவார்களாக. மேலும், மாயூரம் பக்கலில் உள்ள தருமபுரம் சென்று தருமபுரீசுவரரையும், ஞானபுரீசுவரரையும், சொக்கநாதரையும், அஷ்டாதசபுஜ மகாலக்ஷ்மி துர்க்காதேவியையும், வனதுர்க்கா தேவியையும், தருமையாதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்களையும் தரிசிப்பார்களாக.

மாயூர நகரில் சிறப்பாக விளங்குவது மாயூரநாதர் ஆலயம். அம்பிகை திருநாமம் அபயாம்பிகை. அம்பிகை மயில் உருவம் கொண்டு பெருமானை வழிபட்ட தலம். திருக்கோயில் புராதனமானது. திருவாவடுதுறை ஆதீனகர்த்தர் ஆட்சிக்கு உட்பட்டது. இத்திருக்கோயிலில் உள்ள குமரக்கட்டளை ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி தேவஸ்தானம் தருமையாதீன அருளாட்சியில் உள்ளது. மற்றகோயில்கள் :- ஸ்ரீகாசி விசுவநாதர் ஆலயம், (இத்திருக்கோயிலும் தருமையாதீன அருளாட்சியில் உள்ளது) சேந்தங்குடி துர்க்கையம்மன் கோயில், திருஇந்தளூர் பரிமளரங்கநாதர்கோயில், கூறைநாடு புனுகீசுவரர்கோயில், ஐயாறப்பர்கோயில், சியாமளா தேவிகோயில், மற்றும் நூற்றுக்கணக்கானசிறு சிறு கோயில்களும் உள்ளன. என்னே மாயூரக்ஷேத்திரத்தின் மகிமை!

# சிவஞானசித்தியார் தெளிபொருள் விளக்கம்

தருமையாதீனப் புலவர், சித்தாந்தக் கலைமணி

திரு. சி. அருணைவடிவேல் முதலியார்

( மலர் 34. இதழ் 11. பக்கம் 490 இன் தொடர்ச்சி )

போதம்உண் டுயிர்கட் கென்னில்
வாயில்ஐம் புலனும் நூலும்
ஆய்தல்இன் றெட்டுத் தீட்டுக்
கலப்பினில் அறியும் என்னில்,
ஏதம்உண் டிரவிற் பச்சை
சிவப்புடன் ஏய்ந்த போது
கேதம்நின் றென்னே என்னும்
ஐயம்முன் கிடத்த லாலே. 77

## இதன் தெளிபொருள்

'ஆன்மா அறிவுடைப் பொருள்' என்று கூறினால், அது பொருள்களைத் தான் நேரே அறிதல் வேண்டும்; அவ்வாறின்றி ஐம்பொறிகளையும், ஐம்புலன்களையும், சாத்திரங்களையும் கொண்டே பொருள்களை அறிய வேண்டுவது ஏன்?

புலன்களை ஐம்பொறிகளை ஒட்டி நின்றும், புலன் உடைய முதல்களை ( திரவியங்களை ) ப் புலன்களோடு தொடர்புற்று நின்றும், அரும்பொருள்களைச் சாத்திரங்களில் அவையே தானாகக் கலந்து நின்றும் உணர்வதே ஆன்மாவிற்கு இயல்பு எனின், அதுவும் பொருந்தாது ஏனெனில், இரவில் பச்சை, சிவப்பு என்னும் இரண்டு நிறங்களும் ஓரிடத்தே இருந்த பொழுது, அவற்றை இன்ன நிறம் என வேறு வேறாகத் துணியமாட்டாது ஐயத்தையே உடையதாய் நிற்றலால்.

## விளக்கம்

ஆய்தல், இங்கு அவாவுதல். ‘இன்றும்’ என ஆக்கச் சொல் வருவிக்க. ஒட்டுத் திட்டுக் கலப்பினில் அறிதல் என்பது சமண் மத வழக்கம். அவ்வழக்கைப் பிறர் மேலும் வைத்து மறுத்தவாறு. ஏதம் - குற்றம். கேதம் - துன்பம். ‘நிற்ப’ என்பது ‘நின்று’ எனத் திரிந்து நின்றது. 14

அறிந்திடா வாயில் இன்றேல்
அறிவின்றும்; ஐந்தும் பற்றி
அறிந்திடும் அறிவுண் டென்னில்,
ஐந்தினும் அறிவொன் றாக
அறிந்திட வேண்டும்; சார்பின்
அறிந்திடும் என்னில், உன்னை
அறிந்திலோம் புத்தன் என்றிங்
கழகிது சொன்ன வாறே. 78

## இதன் தெளிபொருள்

ஐம்பொறிகள் இல்லாமல் ஆன்மா ஒன்றை அறியமாட்டாமையால், ஆன்மாவிற்கு அறிவு உண்டு என்றல் பொருந்தாது. ‘ஐம்பொறிகட்கு அறிவில்லை’ என்பது உனக்கும் (புத்த சமயிக்கும்) உடன்பாடாதலால், ‘ஐம்பொறிகளைப் பற்றி அறிகின்ற அறிவு ஆன்மாவினுடையதேயன்றே’ எனின், அவ்வறிவு ஆன்மாவினுடையதாயின், எந்தப் பொறியைப் பற்றி அறிந்தாலும் அவ்வறிவு ஒருவகையாகவே இருத்தல் வேண்டும். அவ்வாறின்றி ஒவ்வொரு பொறியைப் பற்றும் போது அறிவு ஒவ்வொரு வகையாய் இருத்தலால், அஃது ஆன்மாவிற்கு உள்ள ஒரு தனி அறிவன்று. ‘ஆன்மாவிற்கு உள்ள ஓர் அறிவே சார்பு வேறுபாட்டால் வெவ்வேறு வகையாய் நிற்கும்’ என்று நீ கூறினால் நன்றாகச் சொன்னாய்; அதுதான், ‘ஆன்மா என்று ஒரு தனி அறிவுடைய பொருள் இல்லை; அறிவுகள் யாவும் அந்த அந்தப் பொருள்கள் சார்பாக ஏற்ற பெற்றியால் தோன்றி அழியும்’ என்பது பௌத்த சித்தாந்தம். அதையே நீ கூறினமையால், உன்னை ‘பௌத்தன்’ என்று யாம் அறியாமற்போனோம்.

## விளக்கம்

ஆன்மவாதிகள் ஆன்ம அறிவிற்குக் கூறும் இயல்பை அறிந்துகொள்ள மாட்டாமையால், பௌத்தர்கள் இங்ஙனம் நகைப்பாராயினர். 15

ஞானனே யங்க ளன்றி
ஞாதிரு என்று சொல்ல
ஆனதிங் கறிவோ, அன்றே?
அன்றெனில் அவனி போலும்.
தானதிங் கறிவே என்னில்
சமைத்திடும் நன்ப ருப்புப்
போனக மதற்குத் தானே
கறியெனப் புகன்ற தாமே. 79

## இதன் தெளிபொருள்

அறிவும், அறியப்படும் பொருளும் என்னும் இரண்டைத்தவிர அறிகின்ற பொருள் என்ற ஒன்றும் தனியே உள்ளது (அதுவே ஆன்மா) எனக் கூறின், 'அந்தப் பொருள் அறிவுடையதோ, அறிவில்லதோ' என வினவுவார்க்கு எவ்வாறு விடை கூறுவது? 'அறிவில்லாத பொருள்' எனக் கூறினால், அது மண் முதலியன போலச் சடமாய், 'அறியும் பொருள்' எனக் கூறியது பிழையாம்; அதற்கு அஞ்சி, 'அறிவுடையது' எனக் கூறினால், பருப்பு முதலியவைகளை (உப்பு, புளி, மிளகு) இட்டுச் சமைத்த சோற்றைச் சுட்டி, 'இதற்குக் கறி யாது' என்று வினவுவார்க்கு 'இதுவே தான் கறி' என்று கூறுவது போல் ஆகும்.

## விளக்கம்

'இதுவேதான் கறி' என்பதற்கு, 'வேறு கறியில்லை' என்பதே பொருளாதல்போல, 'அறியும் பொருள் அறிவுடையதே' என்பதற்கு, 'அறியும் பொருள் அறிவிற்கு வேறாய் இல்லை' என்பது தான் பொருளாகும் என்றபடி.

உயிரினை அருவ தென்னில்
உருவுடன் உற்று நில்லா
துயிரினை உருவ தென்னில்
உடலினில் உடல் அடங்கா
துயிரினை அணுவ தென்னில்
உடற்பல துவாரம் ஓடும்;
உயிரினை நித்தம் என்னில்
உணர்வுத யாந்தம் இன்றே. 80

## இதன் தெளிபொருள்

இன்னும், 'ஆன்மா' என்று ஒரு பொருள் தனித்து உளதாயின், 'அஃது உருவப் பொருளோ, அருவப் பொருளோ' என்னும் வினா எழும். அதற்கு, 'அருவப் பொருள்' என்று விடை கூறினால், அஃது உருவமாகிய உடம்பிற்குள் பொருந்தி நில்லாது. இனி 'உருவப் பொருள்' என்று விடை கூறினால், உடம்பும் உருவம் ஆதலின், அஃது, 'ஓர் உடம்பிற்குள்ளே இன்னோர் உடம்பு உள்ளது' என்று கூறுவதாகவே முடியும்; அது பொருந்தாது. 'உருவப் பொருளாயினும் ஆன்மா அணு அளவினது; (அதனால் உடம்பிற்குள் பொருந்தி நிற்கும்) எனக் கூறின், உயிர் அணுவளவினதாயின் உடம்பில் உள்ள எண்ணற்ற துளைகளில் யாதானும் ஒன்றன் வழியாக வீழ்ந்து விடுமேயன்றி, உடம்பினுள் நிற்கமாட்டாது. அது நிற்க, 'ஆன்மா நித்தப் பொருள்' எனக் கூறினால், உறக்கம், இறப்பு முதலியவற்றில் அறிவு இல்லையாதலும், விழிப்பு, பிறப்பு முதலியவற்றில் அறிவு தோன்றுதலும் ஆகிய தோற்றக் கேடுகள் இன்றி என்றும் ஒரு பெற்றியாய் அறிவு நிலைத்திருத்தல் வேண்டும். அஃது இல்லாமையால், ஆன்மாவை நித்தப் பொருள் என்றலும் பொருந்தாது.

### விளக்கம்

ஆன்ம வாதிகள் ஆன்மாவிற்குக் கூறும் பரிமாணமும், நித்தத் தன்மையும் பொருந்தா என்பது கூறப்பட்டது. இங்கும் இறுதியில் 'இன்றாம்' என ஆக்கச்சொல் வருவிக்க. 17

எங்குமாய் நின்ற தான்மா
    என்றிடில் எங்கும் இன்றாம்;
தங்கிடும் நிறைவு தத்தம்
    சரீரங்கள் தோறும் என்னில்
மங்கிடும் உடலத் தோடே;
    வடிவினில் ஓர்இ டத்தே
அங்கது நின்ற தென்னில்
    அடிமுடி அறிவின் றாமே. 81

## இதன் தெளிபொருள்

'ஆன்மா எங்கும் நிறைந்துள்ள வியாபகப் பொருள்' எனக் கூறினால், அந்த அந்த ஆன்மாவிற்கு அதனதன் உடம்பளவில்

அறிவு நிகழ்தலன்றி, வேறு இடங்களில் அறிவு நிகழாமையால் அக்கூற்றுப் பொருந்தாது. 'ஆன்மாக்கள் அதனதன் உடம்பளவில் நிறைவுடையனவாய் இருக்கும்' எனின், அவ்வாறிருப்பின், உடல் அழியும்பொழுது, ஆன்மாவும் அழிவதாகும். 'ஆன்மா உடம்பில் ஓரிடத்திலே நிற்கும்' எனக் கூறின், அது நின்ற இடத்தில்மட்டும் அறிவுண்டாகவேண்டுமன்றி, அடிமுதல் முடிவரை அறிவுண்டாதல் கூடாது. ஆதலால், அதுவும் பொருந்துமாறில்லை.

## விளக்கம்

ஆன்மாவிற்கு ஆன்ம வாதிகள் கூறும் அணு பரிமாணமேயன்றி மகத்துப் பரிமாணம், மத்திம பரிமாணம் என்பனவும் பொருந்தா எனக்கூறி, யாவும் பொருந்தாதொழியவே, 'ஆன்மா இல்லை' என்பதுதான் முடிவாகின்றது என்பது கருத்து.

இவ்வைந்து செய்யுளிலும், 'ஆன்மா உண்டு' என்பதை அவர்கள் காரணங்காட்டி மறுத்தனர் என்க. 18

(தொடரும்)

---

# ஆசாரக்கோவை*

தருமையாதீனத் தமிழ்ப்புலவர்,

திரு. ந. ரா. முருகவேள், M. A, M. O. L.,

**முன்னுரை :**

ஆசாரக்கோவை என்பது, சங்கம் மருவிய பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்ருகும். சங்க காலத்திலும், அதற்கு அடுத்துச் சிறிது காலத்திலும் தோன்றிய நூல்களுள் ஒன்ருதலின், இது இற்றைக்குச் சற்றேறக்குறைய, 1800 ஆண்டுகளுக்கு முற்பட்டது எனலாம். இதன் ஆசிரியர் பெருவாயில் முள்ளியார் என்னும் சங்க காலப்புலவர் ஆவர்.

ஆசாரம் என்னும் சொல், நல்லொழுக்கம் எனப் பொருள் படும். ஆசிரியர் திருவள்ளுவர் "அச்சமே கீழ்களது ஆசாரம்" என்னும் திருக்குறளில், ஆசாரம் என்னும் சொல்லை, இற்றைக்கு ஏறத்தாழ 2,000 ஆண்டுகளுக்கு முன்னரே கையாண்டிருத்தல் காணலாம். நல்லொழுக்கமாகிய ஆசாரங்களைத் தொகுத்து, ஒழுங்கு படுத்திக் கோவையாக்கிச் செய்யப்பெற்றதனுல், இந் நூலுக்கு ஆசாரக்கோவை என்னும் பெயர் அமைந்தது.

மக்கள் வாழ்க்கைக்கு நன்மை பயக்கக்கூடிய, பலவகை நல்லொழுக்கங்களைப் பற்றி எடுத்துக் கூறி, அறிவுறுத்தும் முறையில் இந்நூல் அமைந்திருத்தலின், செய்திகளை அறிவுறுத்துகின்ற செப்பல் ஓசையில் அமைந்த, இன்னிசை வெண்பா, நேரிசை வெண்பா, குறள் வெண்பா, சிந்தியல் வெண்பா, பஃறொடை வெண்பா முதலிய வெண்பா வகைகளால், இந்நூல் அமைந்திருக்கின்றது. இந்நூலாசிரியர் சைவ சமயத்தைச் சார்ந்தவரென்பதும், இவர்தம் ஊரின் பெயர் வண்கயத்தூர் என்பதும், தற்சிறப்புப் பாயிரச் செய்யுளால் விளங்குகின்றன.

---

* தருமையாதீனத்தில் நிகழ்ந்த ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களின் குருபூசை விழாவில், ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரியசுவாமிகள் அவர்களின் திருமுன்னிலையில், " ஆசாரக்கோவை " நூல் வெளியீட்டை ஒட்டி, ஆற்றிய சிறப்புரையைத் தழுவியது ( 27—10—75 ).

நூற் பெருமை :

ஆசாரக்கோவையென்னும் இந்நூலின் செய்யுட்களை, உரையாசிரியர்கள் ஆங்காங்கே தத்தம் நூல்களில் மேற்கோளாக எடுத்துக்காட்டுகின்றனர். உச்சி மேற் புலவர்கோள் நச்சினார்க்கினியர், தாம் இயற்றிய பத்துப் பாட்டு உரையிலும், சீவக சிந்தாமணி உரையிலும், ஆசாரக்கோவையில் செய்யுட்கள் பலவற்றை மேற்கோள்களாக எடுத்துக்காட்டுவதனால், இற்றைக்கு ஏறத்தாழ 600 ஆண்டுகளுக்கு முன்னரே, இந்நூல் பெரிதும் மிகப் போற்றப்பட்டு வந்தது என்னும் உண்மை புலனாகின்றது. இவ்வாறே நன்னூல், இலக்கண விளக்கம் முதலிய நூல்களின் உரையாசிரியர்களும், தத்தம் நூல்களில் இதன் செய்யுட்களை எடுத்துக் கையாண்டு போற்றியிருக்கின்றனர். பிற்காலப் பாண்டிய அரசர்களுள் மிகவும் சிறந்தவரும், பெரும் புலமை வாய்ந்தவரும், சிறந்த பல நூல்களை இயற்றி உதவியவரும் ஆகிய அதிவீரராம பாண்டியர் (கி. பி. 1564–1604) தாம் இயற்றிய காசி காண்டம் என்னும் நூலில், பல இடங்களில் இவ்வாசாரக்கோவைச் செய்யுட்களின் கருத்துக்களை, ஆங்காங்கே எடுத்துப்போற்றி விளக்குகின்றார். இதனாலும் இந்நூலின் அருமை பெருமைகள் செவ்விதிற் புலனாகிறது.

நூற் பொருள் :

ஒரு மனிதன் தன் வாழ்க்கையில் உண்ணல், உடுத்தல், உறங்குதல், நீராடுதல் முதலிய நாட் கடமைகளையெல்லாம், எவ்வாறு செய்தல் வேண்டும் என்பது பற்றிய செய்திகளை எல்லாம் இந்நூல் சுருக்கமாகவும், தெளிவாகவும் தொகுத்துக் கூறுகின்றது. செய்யத்தக்கன இவை, செய்யத்தகாதன இவை, இன்னசெயலைச் செய்தால் இன்ன நலத்தைப் பெறலாம், இன்னதனைச் செய்தால் இத்தகைய கேடு வரும் என்னும் முறையில், இந்நூல் ஆசாரங்களை அழகுற விளக்கிச் செல்கின்றது. ஆங்காங்கே "முந்தையோர் கண்ட முறை", "பேரறிவாளர் துணிவு", "நல்லறிவாளர் செயல்" என இந்நூல் குறிப்பிடுவதனால், இந்நூல் கூறும் ஆசாரமாகிய நல்லொழுக்கங்கள் பலவும், பண்டைப்பேரறிஞர்கள் பலரும் தத்தம் அனுபவத்தில் ஆராய்ந்து கண்டுணர்ந்த அரிய முடிவுகளே யாம் என்பது பெறப்படும். எனவே இந்நூலின் பொருளை ஈண்டு இயன்றவரை சுருக்கமாகத் தொகுத்துக் காண்போம்.

ஆசார வித்து :

பிறர் செய்த உதவியை என்றும் மறவாது போற்றுதல், பிறர் செய்யும் குற்றங்களைப் பொறுத்துக் கொள்ளும் தன்மை, எவரிடத்தும் இனிமையாகவே பேசுதல், எந்த உயிருக்கும் துன்பம்

செய்யாதிருத்தல், நல்ல நூல்களைக் கற்றுணர்தல், உலக நடை அறிந்து ஒழுகுதல், இது நற்செயல் இது தீச்செயல் என்றுபகுத்துணரும் அறிவினை உடையராதல், நல்ல இயல்பு உடையவர்களுடன் நட்புச் செய்து கொள்ளுதல், ஆகிய இந்த எட்டும் நல்லொழுக்கத்தின் வளர்ச்சிக்கு விதை போன்றனவாகும்.

நல்லொழுக்கத்திலிருந்து சிறிதும் பிறழாது நடப்பவர்கள் நற்குடிப்பிறப்பு, நீண்ட வாழ்க்கை, செல்வம், கல்வியறிவு, வனப்பு, நிலைக்கிழமை ( Status Pririlege ) மிகுந்த புகழ், நோயின்மை முதலிய நலன்களைப் பெறுவார்கள்.

ஆசிரியர்க்குக் காணிக்கை கொடுத்தல், பிறர்க்கு இயன்ற உதவி புரிதல், பொறிபுலன்களை நல்வழியில் செலுத்துதல், கற்க வேண்டுவனவற்றைக் கற்றல் என்னும் இந்நான்கையும், அறம், பொருள் இன்ப நெறிகளுக்கு ஏற்றபடி பாதுகாத்துக் கொண்டு நடத்துதல்வேண்டும். இல்லையேல் பயன் தராமல் கெட்டொழியும்.

**வைகறைக் கடமைகள் :**

ஒவ்வொருவனும் வைகறையாமம் ஆகிய விடியற்காலையிலேயே, துயிலுதலை விட்டு எழுந்து கொள்ளுதல் வேண்டும். எழுந்து, அன்று தாம் செய்வதற்குரிய நல்லறங்களையும், சிறந்த பொருள் தேடும் முயற்சிகளையும் பற்றிச் செவ்வனே சிந்தித்தல் வேண்டும். தாயையும், தந்தையையும் தொழுது வணங்கிக் கொண்டு எழுந்து, தனது நாட்கடமைகளைச் செய்வதற்குத் தொடங்கவேண்டும். இதுவே நம் முன்னோர்கள் ஆராய்ந்து கண்டு அமைத்துச் சென்ற நல்லொழுக்க முறையாகும்.

எச்சில் என்றால், நாம் பொதுவாக வாய் எச்சிலை மட்டுமே நினைவு கூர்கின்றோம். வேறுபல எச்சில்களும் உண்டு. மலம் கழித்தல் சலம் கழித்தல், இணை விழைச்சு, இதழ் பருகல் என்னும் நான்கு எச்சில்களையும், நாம் தக்கவாறு பாதுகாத்துக் கொள்ள வேண்டும். இந்நான்கு எச்சில்களுள் ஏதேனும் ஒன்றை உடையவர்கள், பசுக்கள், அந்தணர்கள். தெய்வத் திருவுருவங்கள், உச்சந்தலை ஆகியவற்றைத் தீண்டுதல் கூடாது. அவ்வாறே புலையன்; சந்திரன், சூரியன், விழுகின்ற விண்மீன், நாய் முதலியவற்றை உற்று நோக்குதல் கூடாது. இவ் எச்சில்கள் நேர்ந்தால் அவற்றைப் போக்கித் தூய்மை செய்து கொள்ளாத முன்பு, அறிவு உடையவர்கள் எதனையும் ஓத மாட்டார்கள்; யாரோடும் பேசமாட்டார்கள்; கண் துயில மாட்டார்கள்.

விடியற்காலையில் ஆல் வேல் முதலிய குச்சிகளால் பல்லைத் துலக்கி, முகம் கழுவிக் கொண்டு, தன் வழிபடு கடவுளைத் தான் அறிந்த முறைப்படி வணங்கித் துதித்து, அதன் பின்னர்த் தனக்

குரிய நாட் கடமைகளை ஒருவன் செய்யத் தொடங்குதல் வேண்டும். மாலை வேளைகளில் தான் வணங்கும் தெய்வத்தை நின்று கொண்டு தொழாமல், ஆர அமர்ந்திருந்து தியானித்துத் தொழுதலே முறையாகும்.

## நீராடல் :

கடவுள் வழிபாடு செய்யத் தலைப்படும் போதும், தீய கனவுகள் கண்ட இடத்தும், தூய்மைக்குறைவு நேர்ந்த பொழுதும், உணவை வாந்தி செய்த இடத்தும், தலைமுடியைக் களைந்த இடத்தும், உணவு கொள்வதற்கு முன்பும், படுக்கையில் நெடுநேரம் தூங்கிய பின்பும், இணைவிழைச்சு செய்த பிறகும், தூய்மையற்ற பிணியாளர்கள் முதலியோரைத் தீண்டிய இடத்தும், மல சலம் கழித்த காலத்தும், யாவரும் இன்றியமையாது நீராடுதல் வேண்டும்.

## நீராடற் குற்றங்கள் :

நீரின்கண் தம் நிழலை விரும்பி நோக்குதலும், தரையைக் கீறுதலும், இராக் காலத்தில் மரத்தின் அடியில் சென்று இருத்தலும் குற்றங்களாகும். நீராடுங் காலத்தில் நெடுநேரம் நீந்தி நீர் நிலையைக் கலக்குதலும், எச்சிலை உமிழ்தலும், நீரில் மூழ்கி நெடுநேரம் மூச்சடக்கி இருத்தலும், விளையாடுதலும், தலையை விடுத்துக் கழுத்தளவில் மட்டும் குளித்தலும் குற்றங்களாகும். நிலம், நீர், தீ, வளி, விசும்பு என்னும் ஐந்து பூதங்களையும், அந்தணர் பசுக்கள் ஞாயிறு, திங்கள் முதலியவற்றையும் நாம் ஒரு போதும் இகழ்தல் கூடாது.

## ஆடை அணிதல் :

ஆடை அணிதல் நாகரிகத்தின் அடையாளம். ஆடை அணிதற்குரிய சில விதிகளையும் கூட, ஆசாரக்கோவை கூறுகின்றது. நீராடும்போது ஆடையில்லாமல் இருத்தல் கூடாது. இடுப்பில் ஆடை அணிந்துகொண்டே நீராடுதல் வேண்டும். உணவு கொள்ளும்போது, ஒற்றை ஆடை அணிந்திருந்தல் கூடாது. தோளில் மேலாடை ஒன்றும் அணிந்திருத்தல் வேண்டும். உடுத்த ஆடையைத் தோய்க்கும் போது, அதனை நீர் நிலையில் பிழிதல் கூடாது. அறிஞர் கூடிய அவைக்களத்திற்குச்செல்லுங்கால் மேலாடையின்றி, ஓர் ஆடையை மட்டும் உடுத்திச் செல்லுதல் ஆகாது இது நம் முன்னோர்கள் கண்ட ஒழுக்கமுறையாகும். தலையில் தடவிய எண்ணெயை எடுத்து, உடலின் வேறு பகுதிகளில் தேய்த்தல் கூடாது. பிறர் உடுத்த அழுக்கு ஆடையையும், பிறர் அணிந்த செருப்பினையும் நாம் தீண்டுதலும் ஆகாது.

( தொடரும் )

# சிதம்பரம் - குகைமடம்

## —: கண்கட்டி :—

# ஸ்ரீ மறைஞான சம்பந்த நாயனர்

திருமுறைக் கலைஞர்

**வித்துவான். திரு. தி. பட்டுச்சாமி ஓதுவார்**

( மலர் 34, இதழ் 11, பக்கம் 499 இன் தொடர்ச்சி )

பலகாலம் அருணையில் வாழ்ந்தார் :

முன்னர், மறைஞானசம்பந்த தேசிகர், "ஞானத்தபோதனரை வா என்று அழைக்குமலை அண்ணுமலை" என்னும் அருணகிரியை வலம் வந்து ஆலயத்துள்சென்று அருணுசலேசுவரரைத் தரிசித்து வழிபட்டுக் கொண்டு திருவண்ணுமலை நகரின் மேலை மாடவீதியில் மலையடிவாரத்தை ஒட்டி மலையேறும் வழியின் தென் பகுதியில் குகை - நமச்சிவாயமூர்த்தி 1 அவர்களின் பரம்

1. இவர்கள் சுமார் 750 ஆண்டுகளுக்குமுன் கன்னடதேசத்திலிருந்து திருவண்ணுமலைத் தலத்திற்கு வந்து, அங்குள்ள மலையின்மீதுள்ள ஒரு குகையில் தங்கிச் சிவயோகத்தில் பலகாலம் வீற்றிருந்து பல சித்திகளும், சிவஞானமும் கைவரப் பெற்ற அருளாளர். வீரசைவர்; கல்வியில் சிறந்தவர், ஆக்கவும் அழிக்கவும் வல்ல கவிதா சக்திவாய்ந்தவர். பற்பல அற்புதங்கள் புரிந்தவர். இவர் ஒரு மலைக்குகையுள் தவம் புரிந்ததனுல் குகை என்ற அடைமொழி பெறலானர். குகை ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகள் அவர்களின் முதல் சீடர் குருநமச்சிவாயர் ஆவர். ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகளை அடுத்துவந்த சீடப் பரம்பரையார் மலையடிவாரத்தில் அமைத்து வீற்றிருந்த மடமே குகை மடம் அல்லது குகை நமச்சிவாயர் மடம் எனப் பெற்றது. மலையிலுள்ள முதல்வர் இருந்த குகையும் குகைமடத்தார்க்கு உரியதாகும். இன்றும் இம்மடத்து அதிபர் ஸ்ரீ அருணுசலேசுவரர் ஆண்டுக்கு இருமுறை திருமலையை வலம் வரும்போது சுவாமியுடன் முன்னர்

பரையார் அதிபதியினர் இருந்துவரும் குகைமடம் என்ற இடத்திற்குச் சென்று அப்போது அம்மடத்துத் தலைவராக வீற்றிருக்கும் ஸ்ரீமத் தம்பிரான் சுவாமிகளைக் கண்டு பேசி நட்புப்பூண்டு அக்குகை மடத்திலே தங்கி இருந்து கிரிவலம், சுவாமி தரிசனம் செய்து வரலானர்.

பின்பு ஒருநாள் மறைஞானசம்பந்த தேசிகர், தம்மோடு கல்வி பயின்று சிவதீட்சைகளைப்பெற்றுத் திருக்காளத்தியப்பரை ஆன்மார்த்த சிவபூசையாகக் கொண்டு நைட்டிக சைவ சந்நியாசம் பூண்டவரும், திருவண்ணுமலை வடக்கு மாடவீதியில் மடாலயம் ஒன்று அமைத்துக்கொண்டு சிவஞானபானுவாக எழுந்தருளிய வருமான ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி தேசிகர் 2 அவர்களைக் கண்டு அன்புகொண்டு பழமைபாராட்டி அடிக்கடிவந்து

---

தனிச்சிவிகையில் (பல்லக்கில்) அமர்ந்து எடுபிடி மேளவாத்தியத்துடன் வலம்வரும் உரிமையோடு இருந்து வருகிறுர்கள்.

2. இவர்களைச்சிலர் ஆதிசைவ குலத்தினர் என்பர். இவர்கள் சிவபூசாகாலத்தில் பூணூல் தரித்திருப்பர்; அக்கினி காரியமும் புரிவர், இவர்கள்மடாலயத்து அண்மையில் கலியாணகிணற்றை அடுத்து ஸ்ரீ மெய்கண்டதேவர் திருக்கோயில் ஒன்று இவர்களுக்கு உரியதாக உள்ளது. ஸ்ரீ தெய்வசிகாமணி தேசிகர் அவர்கள் பரிபூரணம் அடைந்த குருமூர்த்த ஆலயம் திருவண்ணுமலை வேட்டவலம் செல்லும் பெருவழியில் சுமார் 4 பர்லாங்கு தொலைவில் வேட்டவலத்தார் மண்டபத்தின் தென்பால் அண்மையில் உள்ளது. இன்றும் பூசை நடைபெற்று வருகிறது. குருமூர்த்த ஆலயத்தை அடுத்து திருக்குளம் ஒன்றும், என்றும் வற்ருத தம்பிரான் கிணறு ஒன்றும் உள்ளன. இக்குருமூர்த்தம் எண்ணியவற்றை அளிக்கும் தெய்வீகத்தன்மை உடையது. நான் இளமையில் இக்குருமூர்த்தியைப் பலகாலம் நாடோறும்பூசித்துக் கல்வி செல்வம் முதலியவற்றைப் பெற்றவன்.

ஸ்ரீதெய்வசிகாமணி தேசிகர் அவர்களின் பின்வந்த 17 - வது பட்டத்து ஸ்ரீ நாகலிங்கதேசிகர் அவர்கள் இராமேச்சுவர யாத்திரையாகச் சென்றவர்கள் இராமநாதபுரம் அரசர் சேதுபதி அவர்களின் பேராதரவில் காரைக்குடியை அடுத்துள்ள குன்றக்குடி என்ற முருகன் திருத்தலத்திலே தெற்குமாடவீதியில் "திருவண்ணுமலை யாதீனம்" என்ற ஒருமடாலயம் அமைத்து எழுந்தருளி, குன்றக்குடி, திருப்புத்தூர், பிரான்மலை, தேனுட்சியம்மன்கோயில், சதுர்வேதி மங்கலம் ஆகிய ஐந்து கோயில் தேவஸ்தான பரிபாலனமும் பெற்று விளங்கினுர்கள், தற்போது 45 - வது பட்டம்

அளவளாவிச் செல்வர். சிலநாட்களுக்கெல்லாம் குகை மடம் திரு அண்ணுமலை மடம், பெரியநாட்டு மடம், (பெரியமடம்) 3 இவற்றின் அதிபதிகளின் பேரன்பையும் பெற்றுத் திகழ்ந்தார்.

மறைஞானசம்பந்த தேசிகர் திருவருணைக் குகை மடத்தில் இருந்துவரும்போது இவர்களின் கல்வி, ஒழுக்கம். சைவ சீலம் முதலியவற்றைக் கண்ட பல சைவ அன்பர்கள் இவர்களிடம் வந்து வடநூல், தமிழ்நூல், சைவசித்தாந்த சாஸ்திரம் முதலிய வற்றை முறையாகப் பாடங்கேட்டுத் தெளிந்தனர். மறைஞான சம்பந்ததேசிகர் அவர்கள் பல அன்பர்கள் வேண்டுகோளின்படி வடமொழி அருணுசலமான்மியத்தைத் தமிழில் அருணகிரிபுராணம் 4 என்ற பெயரோடு காப்பு, பாயிரம், நாட்டுச்சிறப்பு, நகரச் சிறப்பு களுடன் ஐந்து சருக்கங்கள் 613 - விருத்தப்பாக்களால் பாடி முடித்தார்.

---

ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி அருணுசலதேசிகர் (குன்றக்குடி அடிகளார்) என்பவர்கள் உள்ளார்கள். இம்மடாலய சம்பிரதாயம் போல் சூரியனுர்கோயில் மடம், மதுரை திருஞானசம்பந்த சுவாமிகள் மடம் இவற்றில் சிவபூசாகாலத்தில் அக்கினிகாரியம் செய் கின்றனர்.

3. இப் பெரியமடத்துச் செப்புப்பட்டயம், சகம் 1435 - க்கு கி. பி. 1513ல் அம்பி - அறம்வளர்த்த முதலியார் அளித்த தரும சாசனம் ஆகும். இம்மடத்துத் தலைவர் அழியாவிரதங்கொண்ட தம்பிரான்சுவாமிகள் ஆவர்; இம்மடத்து ஓதுவார் நினைக்கமுத்தி ஓதுவார் ஆவர்.

4 அருணுசலபுராணம் வேறு; அருணகிரிபுராணம் வேறு. அருணுசல புராணம், சைவ எல்லப்ப நாவலர் என்பவர் இயற்றி யது. இவர் சோழநாட்டில் திருவெண்காட்டை அடுத்த இராதா நல்லூரில் பிறந்தவர்; சைவவேளாளர் குலத்தினர்; தருமை யாதீனத்தில் பயின்றவர்; நாவலர், 'சைவ' என்ற பட்டங்களைப் பெற்றவர். பிற்காலத்தில் திருவண்ணுமலையை அடுத்த தாழை நல்லூரில் (தாழநூரில்) இருந்த பெருஞ்செல்வரான எல்லப் பிள்ளை அவர்கள் ஆதரவில் பலகாலம் அங்கு வசித்து வந்தவர். செவ்வந்திபுராணம், திருவெண்காட்டுப்புராணம், திருவிரிஞ்சைப் புராணம், தீர்த்தகிரி புராணம், திருச்செங்காட்டங்குடிப்புராணம் திருவருணைக்கலம்பகம், திருவருணையந்தாதி, முதலியனவும், சௌந்தரியலகரிக்கு ஒரு விருத்தியுரையும் எழுதியவர்; கி. பி. 18 ஆம் நூற்றுண்டின் இடையில் இருந்தவர் என்பது வரலாறு.

அந்த அருணகிரி புராணம், அருணாசலேசுவரர் ஆலயத்தில் மூன்றும் பிராகாரத்திலே பிரமதீர்த்தத்தின் வடபால் சுவாமிசந் நிதியின் வடபாரிசத்தில் மிகப்பெரியதான புரவிபூண்மண்டபத்தில் பெரியமடம் ஸ்ரீ அழியாவிரதங்கொண்ட தம்பிரான் சுவாமிகள் * குகை மடத்துத் தம்பிரான் சுவாமிகள், (திரு) அண்ணாமலை ஆதீன இளவரசுத் தம்பிரான் சுவாமிகள், பிற சைவமடத்து அதிபர்கள் சைவாசாரியர்கள் வைதிகர்கள், பெரும்புலவர்கள் நகரப்பிரமுகர் கள் முதலியோர் கூடிய சபையில் கத - கல்யப்தம் 4656 - க்கு (கி. பி. 1554)க்குச் சரியான பிரமாதீச ஆண்டு தைத் திங்கள் வளர்பிறை ஏகாதசி திதி ஞாயிற்றுக்கிழமை மகேந்திரயோகம், வணிஜகரணம் கூடிய சுபவேளையில் மிகச்சிறப்பாக அரங்கேறி யது. அப்போது மறைஞானசம்பந்த தேசிகர் அடைந்த பெரும் புகழ் அளவிடற்கரியதாம்.

பின்பு சிலகாலம் மறைஞானசம்பந்த தேசிகர் அவர்கள் திருவண்ணாமலை நகரில் சுத்தசைவாசாரியர்கள் இல்லத்திலே விருந்தினராக விளங்கினர். அப்போது அச்சைவாசாரியர் குடும்பத்துச் சில பிள்ளைகளுக்கு வடமொழியையும் வடமொழியி லுள்ள அகோர சிவர் இயற்றிய பூர்வ - அபர - சைவ சோடசக் கிரியா பத்ததி, சிவப்பிரதிஷ்டா விதி முதலியவற்றையும் நன் முறையில் கற்பித்து வந்தார்என அங்குக் கர்ணபரம்பரைச் செய்தி ஒன்று உலவுகிறது.

---

* இவர்களின் ஆதிமுதல்வர் சிவயோகத்தில் வீற்றிருந்து பரிபூரணமான (சிவசமாதியான) இடமே - அங்கு இருக்கும் சிவலிங்கமே தற்போது திருவண்ணாமலைச் சிவாலயத்துள் ஆயிரக்கால் மண்டபத்தின் உள்ளே தென்மேல்பால் மூலையில் விளங்கும் பாதாளலிங்கம் ஆகும். இவர்கள் காலம் முதலாம் கரிகாலச் சோழன் காலம் என்று கூறுவர். இதன் செப்புப் பட்டயம் ஒன்று, ஆயிரக்கால் மண்டபம் கட்டும்போது அதற் குரிய பதில் இடமாகத் திருவண்ணாமலைச் சந்நிதி வீதியில் ஒரு இடம் அளித்து மடமும் அமைத்துக்கொடுத்த இடத்தில் பிற்கா லத்தில் மடத்தை விரிவுபடுத்த அஸ்திவாரம் எடுத்தபோது கிடைத்தது. அத்துடன் அப்பர் சுவாமிகள்சிலை, விநாயகர்சிலை, தம்பிரான் சுவாமிகள் சிலை ஆகிய இவை கிடைத்தன. தற்போது இம்மடம் பெரிய மடம் எனவும், அப்பர் சுவாமிகள் மடம் எனவும் வழங்குகிறது.

(தொடரும்)

# தென்திருமுல்லைவாயில் தலச்சிறப்பு

சோழவள நாட்டில் காவிரியின் வடகரைத் தலங்களில் ஏழாவதாக விளங்கும் இத்தலம் சீகாழிக்குக் கிழக்கே எட்டுகல் தொலைவில் கடற்கரையில் விளங்குகின்றது. மிகப் பெரிய கிராமம். சென்னையை அடுத்துள்ள திருமுல்லைவாயில் வட திருமுல்லைவாயில் எனப்படுவதால் இது தென்திருமுல்லைவாயில் என வழங்கப்படுகிறது.

## மூர்த்திகள் :

இறைவன் ஸ்ரீ முல்லைவனநாதர், ஸ்ரீ மாசிலாமணீசர் எனவும் வழங்கப்பெறுகிறார். இறைவி ஸ்ரீ அணிகொண்டகோதையம்மை. விநாயகர், ஸ்ரீ வரசித்திவிநாயகர். கிழக்குநோக்கிய சந்நிதி. சோலைகளால் எழில்பெற்று விளங்குகிறது இவ்வூர். தலவிருட்சம் முல்லை.

## புராண வரலாறுகள் :

பாண்டிவள நாட்டில் வேள்விகள் பல செய்து சிறந்த சுசாவி என்ற அந்தணர் ஒருவர் இருந்தார். அவருக்குப் பிள்ளைகள் எண்மர். மூத்தவர் வாமதேவர். கல்வி கேள்விகளில் சிறந்தவர். தந்தை இறந்ததும் அவருடைய ஆணைப்படியே அவருடைய எலும்பை புண்ணிய தீர்த்தங்கள் பலவற்றிலும் போட்டார். இத்தலத்து விஷ்ணு தீர்த்தத்தில்தான் எலும்பு இரத்தினமாக மாறிற்று. இத்தீர்த்தக்கரையில் தந்தைக்குப் பிதிர்க்கடனாற்றினார். தந்தைக்கு முத்தியளித்த தனயரானார்.

இறைவனிடம் அம்பிகை திருவைந்தெழுத்தினை உபதேசவாயிலாகப் பெற்று இத்தலத்தை அடைந்து இறைவனை முறைப்படி வழிபட்டு ஐந்தெழுத்தோதிச் சிவஞானம் கைவரப் பெற்றார். " அணிகொண்ட கோதை அவள் நன்று மேத்த அருள்செய்த எந்தை அரனால் " என்பது இத்தலத் தேவாரம்.

இத்தலத்தில் மகோதயம், சூரிய சந்திர கிரஹணம், அமாவாசை, வியதி பாத யோக காலங்களில் திருவைந்தெழுத்தினை ஓதுவோர் நன்மை உறுவர்.

முல்லைவனப் பெருமானின் திருவடி மறவாத சிந்தையை யுடைய ஒரு பரத்தை ஒவ்வொருநாளும் தன்னைத் தீண்டினுரைத் தன் கணவனுகவே கருதி ஒழுகியவள்; சிவபக்தியுடையவளாய் பரத்தமையிலும் ஒரு ஒழுங்கு நெறி கடைப்பிடித்து வாழ்ந்த இவளுக்கு இறைவன் சிவலோகமருளினுன்.

## கிள்ளிவளவன் :

சோழ மன்னன் கிள்ளிவளவன் வேட்டையாடும் பொருட்டு முல்லை நிலமாக இருந்த இத்தலத்தை அடைந்தான். காற்றினும் கடுகிச் செல்லும் தன் குதிரையின் காலை முல்லைக்கொடி தடுத்து நிறுத்தியதை அறிந்த மன்னன் கீழே குதித்து முல்லைக்கொடியை வெட்டினுன். முல்லைப் புதரின் கீழ் இருந்த சிவலிங்கத்தில் உடை வாள் பட்டுக்குருதி பெருகிவரக்கண்ட மன்னன் மனம் பதைத்து தன்னையே வாளால் மாய்த்துக் கொள்ள முற்பட்டான். இறை வன் அருட்காட்சி வழங்கி மன்னனின் மனத் துயரினை மாற்றினர் வளவன் அச்சிவலிங்கத்திற்குச் சிறந்த இத்திருக்கோயிலை எடுப் பித்து விழாக் கொண்டாடினுன்.

## தீர்த்தம் :

இத்தலத்து வாயு திசையில் உள்ள கிணற்றில் கங்கை நித்திய வாசம் பண்ணுகின்ருள். அக்னி திசையில் பிரம தீர்த்த மும், முல்லைவன நாதர் முன்னிலையில் சந்திர தீர்த்தமும்உள்ளன. இத்தீர்த்தத்தில் சந்திரன் முழ்கி க்ஷயரோகம் நீங்கப்பெற்ருன்.

## அன்பர்கள் :

இத்தலத்துக்கு ஞானசம்பந்த சுவாமிகள் பாடிய திருப் பதிகம் ஒன்று உள்ளது சீகாழி வடுகநாத தேசிகர் அவர்களால் தல புராணம் ஒன்று இயற்றப் பெற்றுள்ளது.

## கல்வெட்டுக்கள் :

இத்தலத்தைப் பற்றிய ஐந்து செப்புப்பட்டயங்கள் உள்ளன. ஸ்ரீ கணுதிபதியே நம : முல்லைவனநாதேஸ்வர அணி கோதை யம்மன் பாதார விந்தமே நம : என்று தொடங்கும் ஒரு பட்டயம் கி. பி. 1763 ல் பிரதாப சிம்மர் காலத்தில் வெட்டப் பெற்றது. முல்லைவன நாதருக்கு நித்தியார்ச்சனை அபிஷேக நைவேத்தியங் களுக்கு 10 மாநிலம் அளிக்கப்பெற்ற செய்தி இதில் கூறப்படு

கிறது. இத் தன்மத்தைப் பாதுகாப்பவர்கள் கிள்ளிச்சோழன் பெற்ற பெத்தமுத்தி பெறுவார் என்று கூறுகின்றது. 2 ஆவது, பிரதாப சிம்மர் காலத்தில் கி. பி. 1763 ல் வெட்டப்பட்டது. இது வும நித்தியார்ச்சனை வழிபாடு முதலியவற்றுக்கு நிலமளித்த செய்தியைக் கூறுகின்றது. 3 ஆவது கிருஷ்ணதேவராயர் காலத்தில் 30 வேலி நிலமளித்த செய்தியைக் கூறுகிறது. 4 ஆவது துளசா மகாராஜா சாயபு காலத்தில் திருப்பணி செய்விக்க வேண்டி இறக்குமதி வரி விதித்து எழுதப் பெற்றது 5 ஆவதும் துளசா மகாராஜா காலத்தில் எழுதப் பெற்றது.



---

## பார்வையாளர் குறிப்பு

தருமையாதீனம்

### ஸ்ரீ கம்பகரேசுவரசுவாமி தேவஸ்தானம், திருபுவனம்.

திருபுவனம் திருக்கோயிலுக்கு முன்னரும் சிலமுறைவந்திருக்கிறேன். இந்தத்தடவை இன்றுவந்தபோது, எனக்குச் சிறப்பாகப்பட்டது. புதிதாக மரத்தேர் செய்யப்பெற்றிருப்பதாகும். இந்தப்புதியதேர், பழைய தேரினைச்செய்த மரத்தச்சர் தம் 97வது வயதில் கூறியவண்ணம், பழைய கலை நுணுக்கங்களுடனும் வேலைப்பாட்டுடனும் செய்யப்பெற்றிருக்கிறது என்பதைக் கேட்டபோது மெய்சிலிர்த்தது.

பல கோயில்களில் புதிய தேர் செய்ததும் பழைய தேரைப் பணமாக்கிவிடுவர். பழநித் திருக்கோயிலிலேயே பல ஆண்டுகளுக்கு முன் தேர் ஒன்றினை விற்றனர் என்பதையும், அதை எவ்வாறோ வாங்கிய வெள்ளைக்காரர்கள் சென்னை கனிமரா ஹோட்டலில் காட்சியில் வைத்திருப்பது அறியலாம். தருமையாதீனம் 26ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் இவ்வாறு செய்யாமல் பழைய தேரின் வேலைப்பாடு நிறைந்த பகுதியினை இங்கு திருக்கோயிலுக்குள்ளேயே கலைக்கூடத்தில்பேணிப் பாதுகாத்துவைத்திருக்கும் அருமையும் என் உள்ளத்தைக் கவர்ந்தது. எப்போதும்போல் இக்கோயில் தூய்மையாகக் காட்சி தருகிறது.

22—10—75. (ஒ-ம்) சோ. ம. லெக்ஷ்மணன் செட்டியார்.

# தேவார வைப்புத் தலங்கள்

## திருநாவுக்கரசர்

(மலர் 34. இதழ் 11. பக்கம் 509 - இன் தொடர்ச்சி)

[எண்கள் முறையே, திருமுறை-பதிகம்-பாடல்களைக் குறிப்பன.]

| தலம் | பதிக எண் | இருப்பிடம் |
|---|---|---|
| 28 எழுமூர் | 6-70-5 | தற்போதைய சென்னையின் எழும்பூர் |
| 29 ஏமகூடமலை | 6-7-8<br>6-71-9 | விளங்கவில்லை. இலங்கையில் உள்ள கதிர்காமம் என்பர் சிலர். |
| 30 ஏமநல்லூர் | 6-70-4 | மண்ணிநாட்டு ஏமநல்லூராகிய திரைலோக்கியமாதேவிச்சதுர் வேதி மங்கலம் என்று கல்வெட்டுக் குறிக்கிறது. தெ. இ. க. தொகுதி 2, பக்கம் 331. |
| 31 ஏமப்பேறூர் | 6-70-3 | பண்ணுருட்டியை அடுத்த திருவதிகை (வீரட்டானம்) க்கு அருகில் உள்ள சிற்றூர். |
| 32 ஏயிச்சுரம் | 6-7-8 | விளங்கவில்லை |
| 33 ஏர் | 6-51-6<br>6-70-3 | கும்பகோணத்தை அடுத்த - சுவாமிமலை என்று வழங்கப் பெறும் முருகன் தலம் 'ஏரகம்' என்னும் பெயரில் விளங்குகின்றது. |
| 34 ஏழூர் | 6-70-5 | விளங்கவில்லை. |
| 35 ஓரேடகம் | 6-7-10 | ஒப்பற்ற ஏடகம் என்ற பொருளில் மதுரையை அடுத்த பாடல் பெற்ற தலமாகலாம். இதனை 'உரோடகம்' என்பதன் திரிபாகக் கொண்டால் |

| தலம் | பதிக எண் | இருப்பிடம் |
|---|---|---|
| | | செங்கற்பட்டு மாவட்டத்து ஓர் சிற்றூர் எனக்கொள்ள வேண்டும். 'உரோடகத்து சுந்தரத்தனார்' என்ற சங்கப் புலவர் ஒருவர் இவ்வூரினராதல் கூடும். |
| 36 கச்சிப்பலதளி | 6–70–4 | காஞ்சிபுரத்தில் உள்ள திருமேற்றளி, ஓணகாந்தன் தளி, திருக்காமக்கோட்டம், கச்சிநெறிக்காரைக்காடு முதலிய பல திருக்கோயில்களைக் குறித்ததாகலாம் |
| 37 கச்சிமயானம் | 6-97-10 | காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் திருக்கோயிலுக்குள் விளங்கும் கொடிமரத்துக்கு அண்மையில் விளங்கும் ஓர் சிவசந்நிதி. |
| 38 கஞ்சாறு | 6–70–8 | மாயூரத்திற்கு அண்மையில் இன்று ஆனந்ததாண்டவபுரம் என வழங்கப்படும் ஊர். மானக்கஞ்சாறநாயனார்பிறந்த தலம். |
| 39 கடம்பை இளங்கோயில் | 6-70-5 | தென்கடம்பூர்த் திருக்கரக் கோயிலின் முற்றத்தில் அமைந்துள்ள இளங்கோயில் (பாலாலயம்). |
| 40 கடையக்குடி | 6-71-3 | 'பாண்டி குலாசனி வளநாட்டு மீய்செங்கிளி நாட்டுக் கடையக்குடி' என்று கல்வெட்டுக் குறிக்கிறது. |
| 41 கண்ணை | 6–70–6 | 'செங்கண்மா' என்பதன் மருவிய வடிவம், தற்கால வடவார்க்காடு மாவட்ட 'செங்கம்' என்ற ஊர். |

| தலம் | பதிக எண் | இருப்பிடம் |
|---|---|---|
| 42 கந்தமாதனமலை | 6-71-9 | திருச்செந்தூர்க் கோயிலின் வடபால்உள்ளது என்று திரு. ரா. பி. சே. குறிக்கிறார். |
| 43 கரபுரம் | 6-7-7 | வடவார்க்காடுமாவட்டம், வாலாசாபேட்டைவட்டத்தில்உள்ள 'திருப்பாற்கடல்' என்ற சிற்றூர். |
| 44 கருந்திட்டைக்குடி | 6-71-3 | தஞ்சையை அடுத்த 'கரந்தை' என்னும் 'கருந்தட்டான்குடி' என்றும் வழங்கப்பெறும் இடம். |
| 45 கருமாரி | 6-79-11 | சோலைவளம் மிக்க ஓர் சிற்றூராகக் குறிக்கப் படுகிறது. இருப்பிடம் விளங்கவில்லை. |
| 46 கழுநீர்க்குன்றம் | 6-13-4 | திருத்தணிகைமலை என்பர். ஓரளவு கந்தபுராணம் இதனை விளக்குகின்றது. |
| 47 கறையூர் | 6-70-10 | திருப்பாண்டிக் கொடுமுடி என்னும் பாடல்பெற்ற சிவத்தலம். |
| 48 காம்பிலி | 6-70 2 | பெல்லாரி மாவட்டத்தில் உள்ள 'கரம்பிலி' என்னும் ஊர். |
| 49 காளிங்கம் | 6-7-5 | நீர்வளமுடையதாகக் குறிக்கப் பெறும் இதன் இருப்பிடம் விளங்கவில்லை. |
| ூ0 காறை | 6-70-6 | சப்தவிடங்கத் தலங்களுள் ஒன்றாகிய திருக்காறாயில் என்பதன் திரிபாகலாம். |

தொடர்ந்து அடுத்த இதழில் வெளிவரும் ... ...

ஆதாரம் : பன்னிருதிருமுறை வரலாறு - முதற்பாகம்.

திரு. க. வெள்ளைவாரணனார்.

தகவல் : இரா. செ.

# செய்திகள்

## தருமையாதீனத்தில்

## ஆதீனக் கல்வி நிலையங்களின் கலைமகள் விழா

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம் ஸ்ரீ மகாலக்ஷ்மி துர்க்காதேவி திருக்கோயிலில் நவராத்திரி விழாவை முன்னிட்டு இருபத்தைந்தாவது சதசண்டி வேள்வி விழா 5—10—75 முதல் 14—10—75 முடிய உள்ள நாட்களில் சிறப்புற நிகழ்ந்தது. அந் நாட்களில் ஆதீனக் கல்வி நிலையங்களின் கலைமகள் விழாவும் மிகச் சிறப்பாக நடைபெற்றது. நாள்தோறும் மாலை 3 மணி அளவில் ஆதீனத் தேவாரப் பாடசாலை மாணவர்களின் திருமுறைப் பாராயணத்தொடு ஆதீனத் திருநெறிய தெய்வத் தமிழ் மன்றத்தில் விழா நடைபெற்றது.

தருமையாதீனப்புலவர், திரு. ச. தண்டபாணி தேசிகர், மாயூரம் வழக்குரைஞர், திரு. C. R. குஞ்சிதபாதம் அய்யர் B. A., B. L., மாயூரம், அ. வ. அ. கல்லூரிப் பேராசிரியர், திரு. தி. வ. காந்திமதிநாதன், விரிவுரையாளர்கள் திரு. அ. கலியபெருமாள் M. A., தருமையாதீனத் தமிழ்ப் புலவர், டாக்டர். திரு. சொ. சிங்காரவேலனார் M A., Phd, திரு. சொ. முத்தையன் M. A, மாயூரம் டாக்டர். திரு. மு. சுவாமிநாதன் M. B., B. S, தருமையாதீனம் உயர்பள்ளித் தலைமையாசிரியர், திரு. T. விவேகானந்தம் B. A., B. T,, தருமையாதீனப் பல்கலைக் கல்லூரிப் பொறுப்பு முதல்வர், தருமையாதீனத் தமிழ்ப் புலவர், திரு. வி. சா. குருசாமி தேசிகர் ஆகியோர் நாள்தோறும் விழாவைத் தொடங்கிவைத்துச் சிறப்புரையாற்றினர். ஆதீனப் பல்கலைக் கல்லூரிப் பேராசிரியர்கள், ஆதீன உயர்பள்ளி, வேத சிவாகம பாடசாலை ஆசிரியர்கள், மாயூரம் தேசிய உயர்பள்ளி, நகராட்சி உயர்பள்ளித் தமிழாசிரியர்கள், ஆதீனப் பல்கலைக் கல்லூரி மாணவ - மாணவியர்கள் ஆகியோர் அம்பிகை அருள்நூல்கள், அம்பிகையின் சிறப்புக்கள் பற்றி பல தலைப்புக்களில் விரிவுரையாற்றினர். ஆதீனத் தொடக்கப்பள்ளி, உயர்பள்ளி மாணவ - மாணவியரின் கலை நிகழ்ச்சிகள் விழா நிறைவில் நாள்தோறும் நடைபெற்றன. ஆதீனக் கல்வி நிலைய மாணவ மாணவியர்களும் மற்றும் பல அன்பர்களும் வந்து கலந்து கொண்டு கேட்டுப் பயன்பெற்றனர்.

# ஆதீனத் திருக்கோயில்களில் நவராத்திரி விழா

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான திருக்கோயில்களில் நவராத்திரி விழா 5—10—75 முதல் 14—10—75 முடிய உள்ள நாட்களில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. உலக நலங்கருதி இந்நாட்களில் ஸ்ரீ அம்பாளுக்கு விசேஷ அபிஷேக அலங்கார ஆராதனைகளும் அர்ச்சனைகளும் சொற்பொழிவுகளும் நடைபெற்றன.

வேளூர் ஸ்ரீ வைத்திய நாதசுவாமி தேவஸ்தானத்தில் ஸ்ரீ தையல் நாயகிக்கும், சீகாழி ஸ்ரீ சட்டைநாதசுவாமி தேவஸ்தானத்தில் ஸ்ரீ திருநிலை நாயகிக்கும், திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவர சுவாமி தேவஸ்தானத்தில் ஸ்ரீ பிருகந்நாயகிக்கும், திருபுவனம் ஸ்ரீ கம்பகரேசுவர சுவாமி தேவஸ்தானத்தில் ஸ்ரீ தர்மசம்வர்த்தனி அம்பாளுக்கும், திருக்கடவூர் ஸ்ரீ அமிர்தகடேசுவர சுவாமி தேவஸ்தானத்தில் ஸ்ரீ அபிராமி அம்மைக்கும், திருக்குவளை ஸ்ரீ தியாக ராஜசுவாமி தேவஸ்தானத்தில் ஸ்ரீ வண்டமரும்பூங்குழல் அம்பிகைக்கும் விசேஷ அபிஷேக ஆராதனைகளுடன் 5—10—75 முதல் தொடங்கி லக்ஷார்ச்சனையும் நடைபெற்றன. லக்ஷார்ச்சனை 14—10—75 அன்று நிறைவுற்றது. இத்திருக்கோயில்களில் 10—10—75 வெள்ளிக்கிழமையன்று அறிஞர்களால் விரிவுரை நிகழ்த்தப்பெற்றது. அன்பர்கள் பலர் அங்கங்கும் வந்து வழிபட்டும் விரிவுரைகளைக் கேட்டும் பயன்பெற்றர்.

திருவையாறு ஸ்ரீ பஞ்சநதீசுவரசுவாமி திருக்கோயிலில் ஸ்ரீ தர்மசம்வர்த்தனி அம்பாளுக்கும், குத்தாலம் ஸ்ரீ உக்தவேதீசுவரசுவாமி தேவஸ்தானத்தில் ஸ்ரீ மிருதுமுகிழாம்பிகைக்கும், குறுக்கை ஸ்ரீ வீரட்டேசுவர சுவாமி திருக்கோயிலில் ஸ்ரீ ஞானம்பிகைக்கும், திருப்பறியலூர் ஸ்ரீ வீரட்டேசுவரசுவாமி தேவஸ்தானத்தில் ஸ்ரீ இளங்கொம்பனையாள் அம்பிகைக்கும், தலைஞாயிறு ஸ்ரீ குற்றம்பொறுத்தீசுவர சுவாமி திருக்கோயிலில் ஸ்ரீ அம்பாளுக்கும் திருமுல்லைவாயில் ஸ்ரீ முல்லைவன நாதசுவாமி திருக்கோயிலில் ஸ்ரீ கோதையம்மைக்கும், மாயூரம்-வள்ளலார்கோயில் ஸ்ரீ வதான்யேசுவரசுவாமி திருக்கோயிலில் ஸ்ரீ ஞானம்பிகைக்கும் நவராத்திரி விழா நாட்களில் விசேஷ அபிஷேக ஆராதனைகளுடன் நாள்தோறும் சகஸ்ரநாமார்ச்சனையும், 10—10—75 வெள்ளிக்கிழமை மாலை அறிஞர்களால் சமயச் சொற்பொழிவும் நிகழ்த்தப்பெற்றன. ஆங்காங்கும் பக்தர்கள் பலர் வந்து வழிபட்டும், சொற்பொழிவுகளைக்கேட்டும் அம்பிகையின் அருள்பெற்றுச்சென்றனர்.

ஆச்சாள்புரம் ஸ்ரீ சிவலோகத்தியாகராஜசுவாமி தேவஸ்தானத்தில் ஸ்ரீ திருவெண்ணீற்றுமையம்மைக்கும், பேரளம் ஸ்ரீ சுயம்புநாதசுவாமி திருக்கோயிலில் ஸ்ரீ பவானி அம்மைக்கும், திருநின்றியூர் ஸ்ரீலக்ஷ்மிபுரீசுவர சுவாமி திருக்கோயிலில் ஸ்ரீ அம்பாளுக்கும், திருவிளநகர் ஸ்ரீ துறைகாட்டும்வள்ளலார்சுவாமி திருக்கோயிலில் ஸ்ரீ தோழிநாயகிக்கும், மாயூரம்-ஸ்ரீகாசி விசுவநாத சுவாமி திருக்கோயிலில் ஸ்ரீ விசாலாட்சியம்மைக்கும், கருங்குயில் நாதன்பேட்டை ஸ்ரீ சக்திபுரீசுவரசுவாமி திருக்கோயிலில் ஸ்ரீ ஆனந்தவல்லி அம்மைக்கும், மணக்குடி ஸ்ரீ சுந்தரேசுவர சுவாமி திருக்கோயிலில் ஸ்ரீ சௌந்தரநாயகி அம்மைக்கும் நவராத்திரி விழா நாட்களில் விசேஷ அபிஷேக ஆராதனைகளும் அர்ச்சனையும் சிறப்பாக நடைபெற்றன. 12—10—75 ஞாயிற்றுக்கிழமை மாலை அறிஞர்களால் விரிவுரை நிகழ்த்தப்பட்டது. ஆங்காங்கும் பக்தர்கள் பலர் வந்து வழிபட்டும் சொற்பொழிவுகளைக் கேட்டும் அம்பிகையின் அருளுக்குப் பாத்திரமானார்கள்.

## தருமையில் கந்த சஷ்டி விழா

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம் அருள்மிகு தருமபுரீசுவர சுவாமி திருக்கோயிலில் எழுந்தருளி அருள்வழங்கும் வள்ளியம்மை, தெய்வயானை உடனுறை அருள்மிகு அறுமுகப் பெருமானுக்குத் தருமையாதீனம் 26 ஆவது ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களின் திருவுளப்பாங்கின் வண்ணம் 4—11—75 செவ்வாய்க்கிழமை முதல் 10—11—75 திங்கட்கிழமை முடிய நாள் தோறும் விசேட அபிடேக ஆராதனைகளும், காலை மாலை இரு வேளைகளிலும் சகஸ்ர நாம அர்ச்சனையும் சிறப்பாக நடைபெற்றன.

கந்தசஷ்டித் திருநாட்களில் விரதம் அனுட்டித்தல் முருகப் பெருமானின் திருவருளைப் பெறுதற்கு இன்றியமையாதது. இந்நாட்களில் முருகன் புகழ் நூல்களைப் பாராயணம் செய்வதும். கேட்டு மகிழ்வதும் பெரும் பயன் நல்குவன. முருகப்பெருமானின் பேரருட்கு அனைவரும் பாத்திரராகி, அப்பெருமானின் புகழ் மிக்க வீர அருள் வரலாற்றைக் கேட்டு உய்தி பெறுதற்காக சஷ்டி நாட்களில் கந்தபுராணத் தொடர் விரிவுரையும் முருகப் பெருமான் திருமுன்பில் நடைபெற்றது.

தருமையாதீனத் தமிழ்ப் புலவர், சித்தாந்தக் கலைமணி, மகாவித்துவான், திரு. சி. அருணைவடிவேலு முதலியார் அவர்கள் ஏழு நாட்களும் கந்தபுராணப் பெருங்கதையினை நாள்தோறும் மாலை 6-30 மணி முதல் 8-00 மணி வரை விரித்துரைத்தார்கள். சிவபரம்பொருளும் முருகனும் ஒருவரே என்பதனையும், தவத்தை விட மனிதர்கள் செய்யத்தக்கன பிற இல்லை என்பதனையும், சிவ

பூஜையின் பெருமையினையும், முருகப்பெருமான் திருஅவதாரத்தின் நோக்கத்தினையும் மகாவித்துவான் அவர்கள் கேட்பவர் உளங்கொள்ள பக்திக்கனிவோடு எடுத்துரைத்தார்கள். தருமையிலும், அதன் சுற்றுப்புறங்களிலும் வாழும் திரளான ஆடவர் பெண்டிர் இளைஞர் குழந்தைகள் முதலியோர் இவ்வுரையினைச் செவிமடுத்து உய்திபெற்றனர்.

## தருமையிலும், பெண்ணாகடத்திலும்
## ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனார் குருபூஜை விழா

தருமையாதீனத்திலும், மெய்கண்டார் அவதரித்தருளிய பெண்ணாகடத்திலும் சந்தானாசாரியருள் முதல்வராகிய ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனார் குருபூஜைவிழா ஐப்பசிச் சுவாதித்திருநாள் கூடிய 3—11—75 திங்கட்கிழமையன்று, தருமையாதீனம் 26ஆவது ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் திருவுளப்பாங்கின் வண்ணம் சிறப்புற நடந்தேறியது.

தருமையாதீனம் அருள்மிகு. ஞானபுரீசுவரர் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் சமயாசாரியர், சந்தானாசாரியர்களுக்கும், பெண்ணாகடம் களப்பாளர்மேட்டில் திகழும் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனாருக்கும் காலையில் விசேட அபிடேக ஆராதனைகளும், சிறப்பு வழிபாடும் நடைபெற்றன.

அன்று மாலை, தருமையாதீனம் அருள்மிகு. ஞானபுரீசுவரர் திருக்கோயிலில் தருமையாதீனத் தமிழ்ப் புலவர், சிரோமணி, வித்துவான், திரு. வி. சபேசன் "ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனார் அருள் வரலாறு" என்ற பொருளிலும், வித்துவான், திரு. மா. வே. கண்ணப்பன் "சிவஞானபோதம்" என்றபொருளிலும் உரையாற்றினர்.

பெண்ணாகடம் ஸ்ரீமெய்கண்டார்திருமுன்பில் தருமையாதீனத் தமிழ்ப்புலவர், வித்துவான், திரு. வி. சா. குருசாமிதேசிகர் பி. ஏ., அவர்கள் "சந்தானாசாரியர்" என்ற பொருள்பற்றியும், திருமுறைக் கலாநிதி, பண்ணாராய்ச்சி வித்தகர், குடந்தை, திரு. ப. சுந்தரேசனார் அவர்கள் "சிவஞான சித்தியார் - சுபக்கம்" என்ற பொருள்பற்றியும் உரையாற்றினர், பெண்ணாகடத்தில் காலையில் அபிடேகத்தின்போது வேலூர், திரு. க. சொக்கலிங்க ஓதுவாமூர்த்திகள், "ஸ்ரீ மெய்கண்டாரின் அருள்வரலாற்றை" இசைப் பாடல்களாகப் புனைந்து, சீகாழி, திரு. சா. திருஞானசம்பந்த ஓதுவாமூர்த்திகளுடன் நாமாவளி பஜனையாகப்பாடினார். அன்பர்கள் வழிபட்டுக் கண்டும், கேட்டும் ஸ்ரீ மெய்கண்டாரின் திருவருள் பெற்று உய்ந்தனர்.

## சென்னை, தருமையாதீன சமயப்பிரசார நிலையத்தில் நாயன்மார்கள் குருபூஜை விழாக்கள்

சென்னை, தருமையாதீனம் சமயப்பிரசார நிலையத்தில் 3—10—75 அருணந்திசிவாசாரியார். 13—10—75 ஏனாதி நாயனர், 16—10—75 நரசிங்கமுனையரைய நாயனர், 20—10—75 திருமூல நாயனர், 21—10—75 நெடுமாற நாயனர், 22—10—75 இடங்கழி நாயனர், 27—10—75 சத்தி நாயனர், குருபூஜை விழாக்கள் நடைபெற்றன. குருபூஜையின் போது புலவர், திரு. N இராசு அவர்கள் பெரியபுராணம் வாசித்து விரிவுரை செய்தார்கள். அடுத்து வழிபாட்டிற்கு வந்திருந்த அன்பர்களுக்கும், குழந்தைகளுக்கும் பிரசாதங்கள் வழங்கப்பட்டன.

## திருவாசக விரிவுரை

சென்னை, தருமையாதீனம் சமயப்பிரசார நிலையத்தில் திங்கட்கிழமை தோறும் மாலையில் திருவாசக விரிவுரை தருமை ஆதீனப் புலவர், திரு N. R முருகவேள் அவர்களால் நடத்தப்பட்டு வருகிறது. 1975 அக்டோபர் மாதத்தில் குயிற் பத்து, திருத்தசாங்கம் என்றபகுதிகள் நடைபெற்றது. வகுப்பிற்கு சுமார் 25 அன்பர்களுக்குமேல் வந்து கலந்து கொண்டனர்.

## கிருத்திகை பிரசாதம் வழங்கும் விழா

சென்னை தருமையாதீன சமயப்பிரசார நிலையத்தில், கிருத்திகைப் பிரசாதம் வழங்கும் விழா 24—10—75 ஆம் நாளன்று நடைபெற்றது. விழாவிற்குத் தொண்டர் அருள்தீபம் திரு. சுகப்பிரம்மம் அவர்கள் தலைமை வகித்தார். விழா ஆரம்பத்தில் திரு. S ஞானப்பிரகாசம் வேளூர்ப் பதிகங்களை முறையாகப் பாராயணம் செய்தார். இதில் திருமுறை வகுப்பு மாணவர்களும் கலந்து கொண்டனர். விழாத் தலைவர் தனது தலைமையுரையில் "கார்த்திகைப் பெண்களால் முருகப்பெருமான் வளர்க்கப்பட்டதால் கிருத்திகையன்று விரதம் இருந்து முருகனை வழிபடுவோர் எல்லாப்பேறுகளும் பெறுவர் என்று ஆண்டவன் வரம் கொடுத்ததால், கிருத்திகை எல்லோராலும் விசேஷமாகக் கொண்டாடப் படுகிறது" என்று கூறினர்கள். பின்னர் வழிபாடு நிகழ்த்தி அன்பர்களுக்குப் பிரசாதங்கள் வழங்கப்பட்டன.

## மாத வழிபாடு

சென்னை தருமையாதீன சமயப்பிரசார நிலைய அக்டோபர் மாத வழிபாடு சென்னை சிந்தாதிரிப்பேட்டை ஸ்ரீ ஆதிபுரீஸ்வரர் ஆலயத்தில் 26—10—75 ஞாயிற்றுக்கிழமை மாலை சிறப்பாக நடைபெற்றது. வழிபாட்டின்போது நிலையத்திருமுறை ஆசிரியர், திரு. S. ஞானப்பிரகாசமும், திரு. N. இராமமூர்த்தி அய்யரும்,

திருமுறைப் பாராயணம். அபிராமி அந்தாதிப் பாராயணம், பஜனைகள் செய்தனர். இதில் வழிபாட்டிற்கு வந்திருந்த சில அன்பர்களும் கலந்து கொண்டனர்.

அபிஷேக ஆராதனைக்குப் பிறகு சமயப்பிரசாரக் கூட்டம் நடைபெற்றது. புலவர் திரு N. இராசு அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார். வழிபாட்டில் கலந்து கொண்ட மாயூரம் திரு. V. தண்டபாணி அவர்களும் மற்றும் பலரும் இறை வழிபாட்டின் பெருமையைப் பற்றிப் பேசினார்கள்.

## நவராத்திரி விழா

சென்னை, தருமையாதீனம் சமயப் பிரசார நிலையத்தில் 5–10–75 முதல் நவராத்திரி விழா அறிஞர்களால் விரிவுரையோடு மிகச் சிறப்பாக நடைபெற்று, முதல் ஐந்து நாள் நிகழ்ச்சிகள் பற்றிய செய்திகள் சென்ற இதழில் வெளியிடப்பெற்றன. 10–10–75 அன்று நவராத்திரி விழா அட்வகேட் திரு. N. பழனியப்பன் B. A. B. L. அவர்கள் தலைமையில் நடைபெற்றது. 'வெள்ளிக்கிழமை லக்ஷ்மிக்கு உரிய திருநாள் இலக்குமி கடாக்ஷம் இருந்தால்தான் அறத்தையும் இன்பத்தையும் பெறலாம். பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை. அதனால் பொருள் பெற்று வாழ இலக்குமி வழிபாடு நவராத்திரி நாட்களில் மூன்று நாட்கள் நிகழ்த்தப் பெறுகின்றன. தருமையாதீனத்தில் நவராத்திரி விழா மூலம் மக்களின் மனக் கவலையைப் போக்கி சமய நம்பிக்கையோடு மக்கள் வாழ வழிசெய்கிறார்கள். காலத்திற்கேற்ற சமயத் தொண்டு நிகழ்த்தப் பெறுகிறது' என்று தலைமையுரையில் குறிப்பிட்டார்கள்.

11–10–75 அன்று திருவேற்காடு, தேவி உபாசகர் தவத்திரு இராமதாசர் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. 'திருவேற்காடு கருமாரியம்மனின் கருணையை பக்தர்களுக்கு விளக்கிக் கூறி, தருமையாதீன பிரசார நிலையத்தில் உலகம் உய்வதற்காக – மக்கள் நல்வாழ்வு வாழ்வதற்காக இந்த நவராத்திரி விழாவை நடத்துகிறார்கள். எல்லோரும் அம்பிகையை வழிபட்டு அருள் பெற்று நல்வாழ்வு வாழவேண்டும்' என்று தலைமையுரையில் தெரிவித்தார்கள்.

12–10–75 அன்று தமிழ்நாடு பப்ளிக் சர்வீஸ் கமிஷன் செயலாளர் திரு. N சிவநேசன் I. A. S. அவர்கள் தலைமையில் நிகழ்ந்தது "சமய ஞானம் இல்லாமல் பலர் நிம்மதியில்லாது வாழ்கின்றனர். தமிழக மக்களின் மனக் கவலையைப் போக்கி, அவர்களை சாஸ்திரமும், திருமுறைகளும், நீதி நூல்களும் நம்பிக்கையோடு, நேர்மையோடு வாழத் தூண்டுகின்றன. விரதம் இருப்பதும் வழிபாடு செய்வதும் உடலுக்கும் உள்ளத்திற்கும்

நல்லது. தருமையாதீனம் சமயப் பணி மூலம் மக்கள் நல்வாழ்வு வாழ வகை செய்கிறது " என்று தலைவர் தமது தலைமையுரையில் கூறினார்கள்.

13—10—75 அன்று சித்தயோகி, திரு. முத்து அடிகள் அவர்கள் தலைமையில் விழா சிறப்புற நடைபெற்றது. 'உலக மாதாவாகிய பராசக்தியைச் சரணடைந்து பிரார்த்தனை செய்து வழிபட்டால் அவள் நமக்கு வழிகாட்டியாக அமைவாள். நாம் தன் முனைப்பு அற்ற நிலையில் வாழவேண்டும். தருமையாதீனப் பிரசார நிலையத்தில் நவராத்திரிவிழா முதலியவற்றை ஏற்படுத்தி நம்மை இறையருளில் ஈடுபடுத்துகின்றார்கள்' என்று தலைவர் தலைமையுரையில் குறிப்பிட்டார்கள்.

14—10—75 அன்று நவராத்திரி விழா நிறைவும் தேவாரத் திருமுறை வகுப்பின் 22 ஆவது ஆண்டு நிறைவு விழாவும், உயர் நீதிமன்ற நீதிபதி கனம் திரு. N. கிருஷ்ணசாமி ரெட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. செல்வி. R. கௌரி குழுவினரும், தேவார வகுப்பு மாணவ மாணவியரும் முறையே, தோத்திரம் பாடல்களையும் திருமுறைப் பாடல்களையும் பாடினார்கள். தலைவர் அவர்கள் தமது தலைமையுரையில், 'தருமையாதீனத்தில் சைவத்திற்கு மூலகாரணமாகிய திருமுறைகளைப் பரப்பி வருகிறார்கள். திருமுறைகள் நம்மை வாழவைப்பவை. அவற்றைக் குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுத்தால் வருங்காலம் சுபிட்சமாக இருக்கும். நாம் கருணை உடையவர்களாக – இரக்கம் உடையவர்களாக இருந்தால் அன்னை அருள் எளிதில் கிட்டும்' என்று தெரிவித்தார்கள்.

நவராத்திரி விழா நாட்களில் டாக்டர் திரு. C பாலசுப்பிரமணியம் அவர்கள் நாள்தோறும் அபிராமி அந்தாதிப் பாடல்களுக்கு விளக்க உரை கூறி எல்லோரையும் அன்னை அருளில் திளைக்கச் செய்தார்கள். பின்னர் தலைவர் அவர்கள், அபிராமி அந்தாதி விரிவுரையின் நிறைவு நாளன்று அன்பர்கள் உபயமாக அளித்தவெண்பட்டாடையை, திரு. C. பாலசுப்பிரமணியம் அவர்களுக்குப் போர்த்தி சிறப்பித்தார்கள்.

திரு. முத்து அடிகள், திரு. சிவஞானம் செட்டியார், திரு. V. N. ஆறுமுகம், திரு. தாமோதர முதலியார் ஆகியோர் திரு. C. பாலசுப்பிரமணியம் அவர்களைப் பாராட்டிப் பேசி, விரிவுரை நிகழ அருள் பாலித்த ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களுக்குத் தங்கள் வணக்கத்தைத் தெரிவித்துக் கொண்டார்கள். விழா நிறைவில் அபிராமி அன்னையின் திருவுருவப் படத்திற்கு நாள்தோறும் சகஸ்ரநாம அருச்சனை செய்து வழிபாடு நிகழ்த்தி அன்பர்களுக்குப் பிரசாதங்கள் வழங்கப்பெற்றன.

# எதிர்காலம்

ஜோதிஷம். திரு. A. இராசமாணிக்கம்
ஆசிரியர்,
ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நடுநிலைப்பள்ளி, திருப்பனந்தாள்.

(இராட்சசஹு கார்த்திகைமீ 1உ முதல் உ 29 முடிய)

(17—11—75 முதல் 15—12—75 முடிய)

இராட்சசஹு ஐப்பசிமீ 30உ பானுவாரம் அசுவதி நக்ஷத்திரம் வியதீபாத யோகம் தைதுலை கரணம் கூடிய காலத்தில் உதயம் முதல் 43 நாழிகை 7 விநாடிக்கு கடக லக்கினத்தில் லோக ரட்சகரான சூரியபகவான் லோக சுபிட்சார்த்தம் விருச்சிகராசி சங்கிரமணமாக கார்த்திகை மாதப் பிரவேசம் செய்கிறார். சங்கிரம தேவன் மாணிக்க சாமரம், ரக்த பத்திரகுடையுடன் மத்தளம் வாசித்துக்கொண்டு வைராக்கிய முகத்துடன் தெற்கு முகமாகப் பயணமாகிறார். அதன் பலனாவது உலகெங்கும் ஸஸ்ய தானியங்களும், வனப் பொருள்களும் விருத்தியாகி சகல ஜீவரட்சணை ஏற்படும். கீழை நாடுகளில் கல்வி, விஞ்ஞானம், தொழில் துறைகளில் நவீனத்துடன் முன்னேற்ற மார்க்கம் ஏற்படுவதாகும். பாரத பூமியில் எங்கும் சுபிட்ச சூசகமாக பிரஜைகளின் பொருளாதார வளர்ச்சிக்கான செயல் முறைகளும், பூதானங்களும், பொதுநல சேவா தர்மங்களும் ஆன்றோர்களால் ஏற்பட எல்லா மக்களும் அமைதி வாழ்க்கை நடத்துவார்கள். திருமடங்கள், ஆசாரிய பீடங்கள் ஓங்கும். சைவசமயம் எங்கும் பரவும். தேவாலயங்களில் உற்சவங்களும் நித்தியம் ஆறுகால பூசைகளும் சிறப்பாக நடைபெற்று, மக்கள் தெய்வ பக்தியுடனும் தெளிந்த மனதுடனும் க்ஷேமகரமாக வாழ்வார்கள்.

## சந்திரகிரகணம்

குறிப்பு :— இராட்சசஹு கார்த்திகைமீ 2உ மங்களவாரம் பௌர்ணமி கிருத்திகை நக்ஷத்திரத்தில் இரவு 50 நாழிகை 22½ விநாடிக்கு (நவம்பர் 18, 19௳ புதவாரம் விடியுமுன்) சம்பவிக்கும் கேது கிரஸ்த பிசங்கவர்ணபூர்ணசோமோபராக புண்யகாலம் ஐந்திரபர்வா எங்கும் இந்தியா ஸ்டாண்டர்ட் மணிப்படி,

| | | மணி. நிமி. | |
|---|---|---|---|
| ஸ்பர்சம் | ... | 2—09 | 19—11—75 A. M. |
| நிமீலனம் | ... | 3—33 | ,, |
| மத்தியம் | ... | 3—54 | ,, |
| உன்மீலனம் | ... | 4—14 | ,, |
| மோக்ஷம் | ... | 5—38 | ,, |

ஆதியந்தம் மணி 3, நிமிஷம் 29, பிரமாணம் நூற்றுக்கு நூற்று ஏழுபங்கு சந்திர பிம்ப உத்திர துருவாபி முக நேமியிலிருந்து ஸ்பர்ஸம் கிழக்கே 58 பாகையிலும் மோக்ஷம் மேற்கே 73 பாகையிலும் ஏற்படும். 18—11—75 அன்று பகல் 3 ஆம் ஜாமத்திற்கு மேல் போஜனம் கூடாது. பௌர்ணமி சிரார்த்தம் செய்யலாம், கார்த்திகை, உரோகிணி, மிருகசீரிஷம் முன் ½, உத்திரம், உத்திராடம் நக்ஷத்திரங்களில் பிறந்தவர் சாந்தி செய்துகொள்க. இதில் ஸ்பரிசகாலமுதல் மத்தியகாலம் வரையில் ஸ்நான தர்ப்பணாதிகளும், மத்திய காலமுதல் மோக்ஷ காலம் வரையில் தானங்களும் செய்யவேண்டும்.

## 1. மேஷம் – அசுவதி – பரணி – கார்த்திகை ¼

( சு· சே. சோ. லா. – லி. லு. லே. லோ. – அ. )

மேஷராசி 9 பாதங்களும் எழுத்துக்களும் இம்மாதம்சுபமான பலனைத்தரும். பணச் செலாவணி திருப்திகரமாக இருந்து வரும். குடும்பநலம் பெருகும். சகோதரர், பந்துமித்திரர்கள் விசுவாசமுடனும் சகாயத்துடனும் இருந்துவருவார்கள். இயந்திர வாகனங்களில் சௌகரிய மேன்மையை ஏற்படுத்தும். புத்திரர்களின் கல்வி தொழில் துறைகளில் அரசாங்கத்தால் நன்மையும் பிரபல்யமும் ஏற்படும். வழக்கு விவகாரங்களில் சாதகங்கள் கைகூடும். சாஸ்திரோக்த தரும செலவுகள் மிகும். தெய்வபலத்தால் எல்லாக் கரியங்களும் சிறப்புடன் கண்யமாக நடைபெறும். திங்கள் செவ்வாய் சுபமாகும்.

## 2. ரிஷபம் – கார்த்திகை¾ – உரோகிணி – மிருகசீர்ஷம்½

( இ. ஊ. ஏ. – ஓ. வ. வி. வூ. – வே. வோ. )

ரிஷபராசி 9 பாதங்களும் எழுத்துக்களும் இம்மாதம் சுப பலனைத்தரும். தனவசதி பெருகும். குடும்பம் விருத்திகரமாக சிரமங்கள் தோன்றாமல் இருந்துவரும். வீடு வாகனங்களின் விருத்தியும் அரசாங்க அனுகூலங்களும் ஏற்படும். புத்திரர்களுக்கு சௌக்கியம் மேலிடும். தாம்பத்திய வாழ்க்கையில்

சௌக்கியமும் பரஸ்பர நிலைமையுமாக இருந்துவரும். பிரபலஸ்தர்களினுல் மேன்மை ஸ்திதியையும் சகல காரியங்களிலும் பேரந்தஸ்தையும் கொடுக்கும். புதன் வியாழன் சுபமாகும்.

### 3. மிதுனம்–மிருகசீர்ஷம் ½ – திருவாதிரை–புனர்பூசம் ¾

( கா. கி. – கு. க. ங. ச்சா. – கே. கோ. ஹ. )

மிதுனராசி 9 பாதங்களும் எழுத்துக்களும் இம்மாதம் மிச்சிரமான பலனுக நடக்கும். தனவசதி திருப்திகரமாக இருந்துவரும். குடும்பத்தில் சிலசமயம் சிரமம்போல் தோன்றி பின் சௌகரியத்தை ஏற்படுத்தும். சகோதரர் குடும்பத்தில் அல்லல் தீர்ந்து முன்னேற்றம் ஏற்படும். மனைவிக்கு மூர்ச்சைபோன்ற நலிவுவந்து குணமாகும், மூதாதையர் பொருளில் பாகம் அடைதல் அல்லது ஓர் தீர்வு ஏற்படச்செய்யும். போட்டி விஷயங்களில் வெற்றியைக் கொடுக்கும். இராசாங்க அனுகூலங்கள் ஏற்படும். வெள்ளி சனி சுபமாகும்.

### 4. கடகம் – புனர்பூசம் ¼ – பூசம் – ஆயில்யம்

( ஹி. – ஹு. ஹே. ஹோ. ட. – டி. டு. டே. டோ. )

கடகராசி 9 பாதங்களும் எழுத்துக்களும் இம்மாதம் மிச்சிர பலனுக நடக்கும். தனபாக்கியம் விருத்தியும் பழைய பாக்கிகள் வசூலிப்பதில் நியாயங்களும் அனுகூலமும் ஏற்படும். இயந்திர வாகன வசதி பெருகும். பழுதான பழைய கட்டிடங்கள் சீர்திருத்தம் ஆகும். சிறுகுடலில் உபத்திரவம்வந்து உடன் வைத்தியத்தால் குணமாகும். சூரிய கிரக பிரீதிசெய்ய நலம்தரும். எல்லாக் காரியங்களிலும் ஸ்ரீ விஜயலட்சுமியின் கடாட்சத்தால் ஜெயபிரதாபம் உண்டாகும். ஞாயிறு திங்கள் சுபமாகும்.

### 5. சிம்மம் – மகம் – பூரம் – உத்திரம் ¼

( ம. மி. மு. மெ. – மோ. டா. டி. டு. – டே. )

சிம்மராசி 9 பாதங்களும் எழுத்துக்களும் இம்மாதம் சுப பலனைத்தரும். தனவசதி சிறப்பு மிகுந்ததாக இருக்கும். எழுத்து மூலிய ரிகார்டுகளில் பேரந்தஸ்தும், மேலிட போற்றுதல்களும் ஏற்படும். குடும்பத்தில் சுபநிகழ்ச்சிகளும், சகோதரர் ஒருவருக்கு மனவருத்தத்துக்கிடையே சுபமும் ஏற்படும். புத்திரரின் தொழில்களில் மேன்மைஸ்திதி ஏற்படும். கணவன் மனைவியரிடையே பரஸ்பர நிலைமையாக இருக்கும். எல்லாக்காரியங்களும் தைரியமுடன் செயல்படும். மூதாதையர் சொத்தினுல் குடும்பத்தில் ஒரு

சர்ச்சையும் ஆதாய பிராப்தியும் ஆகும். செவ்வாய் புதன் சுப மாகும்.

### 6. கன்னி – உத்திரம் ¾ – ஹஸ்தம் – சித்திரை ½

( டோ. ப. பி. – பு. ஷ. ண. ட. – பே. போ. )

கன்னியாராசி 9 பாதங்களும் எழுத்துக்களும் இம்மாதம் மிச்சிர பலனாக நடக்கும். தனம் வரவும் செலவும் சரிசமமாக இருந்துவரும். குடும்ப நலம் பெருகும். சகோதரர்களுக்கு பேரந்தஸ்து ஏற்படும். பந்து அம்மான் இவர்களால் சுபச் செலவுகளும், புத்திரர்களின் கல்வி தொழில் துறைகளில் நற் பலன்களும் ஏற்படும். தாம்பத்திய வாழ்க்கையில் சுமுகநிலைமை யும் சௌகரியமும் ஏற்படும். மன அல்லல் நீங்கும். ஜீவனோ பாயத்தொழிலில் காரியங்கள் திறம்பட நடைபெறும். மேலோர் பெரியோர்களால் ஆசியும் நன்மைகளும் ஏற்படும். வியாழன் வெள்ளி சுபமாகும்.

### 7. துலாம் – சித்திரை ½ – சுவாதி – விசாகம் ¾

( ர. ரி. – ரு. ரே. ரோ. தா. – தி. து. தே. )

துலாராசி 9 பாதங்களும் எழுத்துக்களும் இம்மாதம் மிச்சிர பலனாக நடக்கும். குடும்பத்தில் வரவும் செலவும் சரிசமமாக இருக்கும். சகோதரர் பந்துமித்திரர்களின் விசுவாசம், சகாயம் இவை மனஉவகையளிக்கும். புத்திரர் பௌத்திரர்கள் நலமுடன் இருப்பார்கள். சுக விருத்தியும், கணவன் மனைவியரிடையே இருந்த குறைகள் நீங்குதலாகி பரஸ்பர நிலைமையும் ஏற்படும். இம்மாதம் பிற்பகுதியில் பொருளாதார சம்பந்தமான ஒரு சர்ச்சைவந்து நீங்கும். ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிக்கு அருச்சனை செய்ய நலம்தரும். தெய்வானுக்கிரகத்தால் எல்லாக்காரியங்களும் சித்தியாகும். சனி ஞாயிறு சுபமாகும்.

### 8. விருச்சிகம் – விசாகம் ¼ – அனுஷம் – கேட்டை.

( தோ. – ந. நி. நு. நெ. – நோ. ய. யி. யு. )

விருச்சிகராசி 9 பாதங்களும் எழுத்துக்களும் இம்மாதம் சுப பலனாக நடக்கும். பணவசதி தாராளமாக இருந்துவரும். வாக்கு கௌரவமும், சௌக்கியமும், திடீரென ஆதாய பிராப்தி யும் ஏற்படும். வித்துவத் தொழில் துறைகளில் முன்னேற்றம் உண்டாகும். சரீரத்தில் உஷ்ணாதிக்கமாக இருக்கும். காயம் படுதல் போன்ற அசந்தர்ப்பம் ஏற்படும். இம்மாதப் பிற்பகுதியில்

நல்ல முன்னேற்றமும், சயனசுகாதி அனுபோகங்களும். புத்திரர் புத்திரிகளுக்குச் சுபகாரியங்களும் ஏற்படும். சகல காரியங்களும் விக்கினமின்றி நிறைவேறும். திங்கள் செவ்வாய் சுபமாகும்.

9. தனுசு – மூலம் – பூராடம் – உத்திராடம் ¼

(யே. யோ. பா. பி. – பு. த. ப. ட. – பே.)

தனுர்ராசி 9 பாதங்களும் எழுத்துக்களும் இம்மாதம் மிச்சிர பலனை நடக்கும். தனபாக்கிய விஷயத்தில் வரவும் செலவும் சரி சமமாக இருந்துவரும். வாக்குஸ்தானம் அசுபர்கள் வீட்சணம் பெற்றதால் தன் வாக்கிற்குக் கௌரவமில்லாத நிலைமையும் குடும்பத்தாரிடையே அடிக்கடிமனஸ்தாபமும் ஏற்படினும், உடன் சமாளித்தல் ஆகும். சகோதரர் புத்திரர் மூலமான வியாகூலமும் செலவுமாக இருப்பினும் உடன் தக்கோரால் ஆறுதலும் உதவி களும் ஏற்படும். செய்தொழில் அல்லது உத்தியோகத்தில் சுமார் நிலைமையாக இருந்து வரும். ஸ்ரீ சுப்ரமண்ய சுவாமிக்கு அநுச் சனை செய்ய நலம் தரும். புதன், வியாழன் சுபமாகும்.

10. மகரம் – உத்திராடம் ¾ – திருவோணம் – அவிட்டம் ½

(போ. ஜ. ஜி. – கி. கு. கே. கோ. – க. கி.)

மகர ராசி 9 பாதங்களும் எழுத்துக்களும் இம்மாதம் சுப பலனைத் தரும். தனவசதி திருப்திகரமாக இருந்து வரும். வித்தியா வியாபாரவிருத்தியும் குறிப்பிட்டுள்ள மூல தனம் வரவும் ஆகும். வீடு, மனை சேர்க்கை சம்பந்தமான முயற்சியிலும் புத்திரர்களின் முன்னேற்றத்திற்கான முயற்சியிலும் நற்பலன் கிட்டும். தாம் பத்திய வாழ்க்கையில் பரஸ்பரமான நிலைமையாக இருந்து வரும். ஓர் ஸ்தல யாத்திரை நேரும். எல்லாக்காரியங் களிலும் பூரண வெற்றியைக் கொடுக்கும். வெள்ளி, சனி சுப மாகும்.

11. கும்பம் – அவிட்டம் ½ – சதயம் – பூரட்டாதி ¾

(கு. கே. – கோ. ஸ. ஸி. ஸு. – ஸே. ஸோ. தா.)

கும்பராசி 9 பாதங்களும் எழுத்துக்களும் இம்மாதம் சுப பலனை நடக்கும். தன வசதி கண்யமாக இருந்து வரும். குடும்ப நலம் பெருகும். பெற்றோரின் சௌகரிய மேன்மையால் சந்துஷ்டி நிலவும். பூர்வப் பொருள்களில் பாகங்கள் அடைதலும், செய் தொழிலில் அந்தஸ்து மேலிடுதலும் இராசயோக அனுபோகங் களும் ஏற்படும். அரசாங்க செல்வாக்கை உண்டு பண்ணும்.

எல்லாக் காரியங்களும் நவீனமான முறையுடன் செயல்படும். மேலதிகாரிகள் புகழ்தல் சன்மானதிகள் வழங்கல் முதலிய நற்பலனளிக்கும். ஞாயிறு திங்கள் சுபமாகும்.

## 12. மீனம் – பூரட்டாதி ¼ – உத்திரட்டாதி – ரேவதி

( தி. – து. ஸ. ச. த. – தே. தோ. ச. சி )

மீனராசி 9 பாதங்களும் எழுத்துக்களும் இம்மாதம் மிச்சிர பலனாக நடக்கும். பண விஷயத்தில் எவ்வளவு பெருந் தொகை கை வசமாயினும் உடன் பூராவும் செலவாகும். குடும்ப பிரச்சினைகளைத் தீர்ப்பதில் சுமையாகத் தோன்றும். சகோதரர் பெற்றோர்களின் அபிப்பிராய பேதங்கள் மனோவாயாசமாக இருக்கும். புத்திரர்களின் கல்வி, தொழில் துறைகளில் மேன்மை ஸ்திதி ஏற்படும். இம்மாதப் பிற்பகுதியில் வழக்கு விவகாரத்தில் சாதகம் காணும். மனைவிக்கு வந்த நலிவுகள் நீங்கும். ஜீவனோபாயத்தில் சர்ச்சையாயினும் மதி நுணுக்கமாகச் செயல்படுவதும் அனுகூலமும் ஆகும். ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிக்கு அருச்சனை செய்ய நலம் தரும். செவ்வாய், புதன் சுபமாகும்.

---

## EXTRACT FROM THE VISITORS' BOOK

Dharmapuram Adhinam
Sri Sattanathaswami Devasthanam, Sirkali.

" It is one of the cleanest and well maintained temples we have come acoss in our pilgrimage. This helps to create and increase the devotional feelings and also helps to achieve the mental peace and transqullity which one always tries to seek in a sacred place. The priests and the other members of the team are also duty and religious conscious. "

(S-d) D: P. Patkar.
(S-d) Smt. Geetha Patkar.
(S-d) Rajiv D. Patkar.
(S-d) Master Shailash Patkar.
(S-d) P. C. Subbaraju.
21—10—75. (S-d) P. S. Ramanathan.

கடிதம் :

K. Ramalingam M. A,
Research & Development Council,
Govt. of Tamilnadu.

"TAMIL MANAM"
21, East Park Road,
Shenoy Nagar. Madras 600030.
23—10—75.

பூம்புகாரில் அண்மையில் நடைபெற்ற தமிழகப் புலவர் குழுக் கூட்டத்திற்குச் செல்வதற்கு முன்பு, சேவித்து அருள் பெறத் தருமைக்குச், சில புலவர்களுடன் அடியேன் வந்தபோது குருபரர் ஆற்றிய, உள்ளமுருக்கும் சொக்கேசர் பூசையையும் நவராத்திரி சதசண்டி யாக வழிபாட்டையும், பிற பூசனைகளையும், முறையாகச் சேவித்துப் பயனடையும் வாய்ப்பினைப் பெற்றேன். குருநாதரைத் தனியே, புலவர் பெருமக்களுடன், கண்டு உரையாடிப் பல அரிய செய்திகளை அறிந்து கொள்ளும் பேறும் கிடைத்தது. அருளுணர்வூட்டும் அன்னமும், அரும் பொருள் கொண்ட நூல்களும் வழங்கி வாழ்த்தப் பெற்றோம். உடன் வந்த புலவர்களுடன் தருமைத் திருமடத்தின் சிறப்பையும், குருபெருமானரின் தண்ணளியையும் போற்றிப் புகழ்ந்து மகிழ்ந்த வண்ணமே, உய்த்தருளிய ஊர்தியில் பூம்புகார் நண்ணினேம். உடன் வந்த புலவர்கள் வித்துவான் திரு. கோ. மு முத்துசுவாமிபிள்ளை ஐ ஏ.எஸ்., பேராசிரியர் டாக்டர். மெ. சுந்தரம் எம். ஏ, பி எச் டி., (மாநிலக் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர்) பேராசிரியர் டாக்டர். தமிழண்ணல் எம். ஏ, பி எச் டி. (மதுரைப் பல்கலைக் கழகம்) பிறர் சார்பாகவும், எனது தனிமுறையாகவும், பணிவார்ந்த நன்றியறிதலை வணக்கத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். இதனை வரைய முற்படுவதற்கு முன்பு, புரட்டாசித்திங்கள் 'ஞானசம்பந்தம்' கையுற்றுக் கருத்தைக் கசிவித்தது.

அடியேன்பால் அளவிலாத அன்பு கொண்டிருந்த திருவார் திரு கயிலைக்குருமணி அவர்களின் நான்காம் ஆண்டுக் குருபூசை பற்றிய செய்தியைக் கண்டதும், உள்ளம் உருகிற்று. தலையங்கம், கனிவுசான்ற மொழியிலே, அவர்கள் சிறப்புக்கள் அனைத்தையும், இரத்தினச் சுருக்கமாகக் கூறிப், படிப்பார் உள்ளத்தைப் பரவசப் படுத்தும் பாங்கில், அமைந்துள்ளது. முகப்பிலிருக்கும் அவர்கள் திருவுருவப் படம், நேரில் அவர்களைப்பார்ப்பது போன்ற உணர்வினை அளித்தது. முப்பதாண்டுகளுக்கு மேலாக, அவர்கள் குருபீடம் அமர்வதற்கு முன்பிருந்தே அவர்களை அவ்வப்போது சேவித்து அளவளாவும்பேறு கிட்டியிருந்தது. அவர்கள் அருள் ஞான அரியணை அமர்ந்த பின்பு, அவர்களை உரிமையுடன் அணுகி வழிபட்டு உரையாடும் பேறும் பெற்றிருந்தேன். அடியேனை அவர்கள் வா என்று அருளி ஆதீனக் கல்லூரிக்கு முதல்வராக அமர்த்திய பிறகு, அன்றுடம் அவர்களை நெருங்கி

வணங்கிப் போற்றும் சிறப்பும் கிடைத்திருந்தது. ஒரு பெரிய திருமடத்தின் குருமகா சந்நிதானம் அவர்களை அணுகுகிறோம் அவர்களோடு பழகுகிறோமே, உரையாடுகிறோமே என்னும் அச்சம் ஒரு சிறிதும் தோன்றாத வண்ணம் அவ்வளவு கலந்த அன்போடு உரையாடுவார்கள், உறவாடுவார்கள். அவர்கள் திருமேனிப்பொலிவினை அடியேன் அவ்வப்போது கனவிற்கண்டு களிப்பேன். அவர்கள் மறைந்துவிட்டார்கள் என்னும் நினைவே நினைவிலிருந்து அகன்று விடும். இனி, என்றோ, அவர்களது அருளன்பினுக்கு ஆளாவது ! குருபிரான் திருவடிகள் வாழ்க !

---

### ஸ்ரீ வில்லிபுத்தூர்
### ஸ்ரீ குருஞானசம்பந்தர் இந்து உயர்நிலைப் பள்ளியில்
## ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி குருபூசை விழா

ஸ்ரீ வில்லிபுத்தூர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் இந்து உயர்நிலைப் பள்ளியில் தருமையாதீனம் 25 ஆவது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் குருபூஜை விழா, சிவகிரி பாலவிநாயகர் உயர்நிலைப் பள்ளியின் முன்னாள் தலைமையாசிரியர் திரு. K. சீனிவாசன் அவர்கள் தலைமையில் 27—10—75 அன்று மாலை சிறப்புற நிகழ்ந்தது. பள்ளித் தலைமையாசிரியர் திரு. S. அனந்த நாராயணன் அவர்கள் 'ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள், தருமையாதீனக் குரு முதல்வர் அவதரித்த தலமாகிய ஸ்ரீ வில்லிபுத்தூரில் நடைபெற்று வரும் இப்பள்ளி, தருமையாதீனக் குருமுதல்வர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் திருப்பெயரால் சிறப்புற்று விளங்க அருள்பாலித்தார்கள்' என்று கூறி, விழாவிற்கு வந்திருந்த பெருமக்களையும் சிறப்புச் சொற்பொழிவாளராகிய 'செந்தமிழ்ச் செல்வர்' திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்களையும் வரவேற்றார்கள்.

திரு. கி. வா. ஜ. அவர்கள், ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி பற்றி விரிவுரையாற்றும் போது, தமக்கு நிகழ்ந்த மணி விழாவிற்குத் தக்கவர் மூலமாகச் சிறப்புக்கள் செய்தார்கள். பின்னர், ஒரு திங்களில் சென்னைக்கு எழுந்தருளிய போதும் தொலைபேசி மூலம் எங்களை வரப்பணித்து, எதைக் கொடுப்பதானாலும் தன் பெயர் விளங்கவும் தன்னை வணங்கவும் கூறும்இக்காலத்தார் போலன்றி பட்டாடைகள் முதலியன வழங்கி இருவருமாகக் கபாலீசுவரரைத் தொழுது வாருங்கள் என்று ஆசியருளிய கயிலைக் குருமணியின் கருணைத் திறத்தை என்னென்பேன். அத்தகைய நல்லார் திருநாளில் திருமடத்து உணவால் உரம் பெற்று வளர்ந்து அறிவு

பெற்ற தன்னையும் திருமடத்து அன்பனுகக் கலந்து கொள்ளச் செய்த திருவருள் திறத்திற்கு நன்றி கூறி ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களின் குருபக்தியைவிளக்கி அத்தகைய குரு பக்தியை மாணவர்களாகிய நீங்களும் பெறவேண்டும் என்று சொல்லிக் கேட்பவர்களையெல்லாம் உணர்ச்சிவயப்படுத்தினுர்கள்.

## தருமையிலும் மாயூரத்திலும்

# ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமணி குருபூஜை விழா

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம் 25 ஆவது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞான சம்பந்த பரமாசாரிய சுவாமிகள் பரிபூரணமான நான்காவது ஆண்டுக் குருபூஜை விழா 27—10—75 திங்கட்கிழமை குருமூர்த்த ஆலயத்தில் காலை மாலை இரு வேளைகளிலும் விசேட அபிடேக ஆராதனைகளுடன் மிகச் சிறப்பாக நடைபெற்றது. காலை வழி பாட்டிற்குப் பின்னர் வித்துவான் ஸ்ரீமத் இராமலிங்கத்தம்பிரான் சுவாமிகள் ஆதீனக் கல்லூரிப் பேராசிரியர்கள் முதலியவர் களால் பண்டார சாத்திரங்கள் பற்றிய விரிவுரை நிகழ்த்தப் பெற்றது.

மாலை 6 மணி அளவில் தொடங்கி சீகாழி திரு. S. திருஞான சம்பந்தம், திருச்சி திரு. S. முத்துக் கந்தசாமி குழுவினரின் திருமுறை இன்னிசையரங்கு நிகழ்ந்தது. 8மணி அளவில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி குருமூர்த்த வழிபாடு கள் நிகழ்த்தி பிரசாதங்கள் வழங்கி ஆசியருளினுர்கள். விழா மலராக ‘ ஆசாரக் கோவை ’ என்ற நூல் வெளியிடப்பெற்றது. விழா மலரைத் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் வித்துவான். ஸ்ரீமத். காசிவாசி முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் பக்தர்களுக்கு வழங்கி வெளியீட்டுரை வழங்கினுர்கள். தருமை யாதீனப் புலவர் திரு. N. R. முருகவேள் M. A. அவர்கள் ஆசாரக் கோவை என்னும் தலைப்பில் மக்களால் பின்பற்றத் தக்க ஆசாரங் களைத் தொகுத்துக் கூறி விரிவுரையாற்றினுர்கள். பின்னர் தருமை யாதீனப் பண்ணிசைப் புலவர் திரு. பி. சுவாமிநாதன் குழுவின ரால் “ ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமணி அருளாட்சி ” என்ற தலைப்பில் நாமாவளிக்கதை நிகழ்த்தப்பெற்றது. வழிபாட்டிற்கு வெளியூர் அன்பர்கள் பலர் வந்து கலந்து கொண்டு பிரசாதம் பெற்று மகிழ்ந்தனர்.

வழிபாட்டின் நிறைவில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர் கள் தருமையாதீனத்தில் நாள்தோறும் மாலையில் நடத்தப்பெறும் திருமுறை வகுப்பில் பயிலும் சிறுவர் சிறுமியர்களுக்குப் புத்தாடை கள் வழங்கியருளினுர்கள்.

## மாயூரம் தெய்வத் தமிழ் மன்றத்தில்

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் அருட்கொடையில், 25, 26—10—75 ஆகிய இருநாட்களிலும் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியின் குருபூஜை விழா தோத்திர சாத்திர விழாவாக மாயூரம் தெய்வத் தமிழ் மன்றத்தினரால் தேசிய உயர்பள்ளி வழிபாட்டிடத்தில் சிறப்புற நிகழ்த்தப்பெற்றது. மன்றத் தலைவர் திரு. ச. மகாதேவன் அவர்கள் வரவேற்புரையோடு விழா மாலை 6 மணி அளவில் தொடங்கியது. தோத்திரத்திற்கு, திருநாவுக்கரசர் திருமுறையும் சாத்திரத்திற்கு அருணந்திசிவம் அருளிய சிவஞானசித்தியாரும் தலைப்புகளாக அமைந்தன. தருமையாதீனத் தமிழ்ப் புலவர், திரு. கு. சுந்தரமூர்த்தி அவர்கள் அப்பர் தேவாரத்தில் – இறையியல் நோக்கு; இலக்கிய நோக்கு என்ற தலைப்புக்களிலும், தருமையாதீனத் தமிழ்ப் புலவர், திரு. ந. ரா. முருகவேள் அவர்கள் சிவஞான சித்தியாரில் – பதி இயல்பு, பசு – பாச இயல்புகள் என்ற தலைப்புக்களிலும் இரண்டு நாட்களும் ஆராய்ச்சி விரிவுரையாற்றினர். தருமையாதீனப்பண்ணிசைப் புலவர், தருமபுரம். திரு பி. சுவாமிநாதன், திருச்சிராப்பள்ளி. திரு. முத்துக்கந்தசாமி குழுவினரால் முதல்நாள் குருபரம்பரை இன்னிசை உரையும், மறுநாள் திருமுறை இன்னிசையரங்கும் நிகழ்த்தப்பெற்றன. மன்றச் செயலர் திரு. இரா. இராசசேகரன் அவர்கள் நன்றியுரையோடும் வாழ்த்துப்பாடலோடும் விழா நிறைவுற்றது.

---

40

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்
இருபத்தாறுவது குருமகாசந்நிதானம்

### ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

### மாத ஜன்மநட்சத்திர வழிபாடு

நிகழும் இராட்சச ஆண்டு கார்த்திகைத்திங்கள் 9 ஆம் நாள் (25-11-75) செவ்வாய்க்கிழமை ஆயில்ய நட்சத்திரத்தன்று திருவெண்காட்டிற்கு அருகில் உள்ள அன்னப்பன்பேட்டை என வழங்கும் கலிக்காமூர் அருள்மிகு அழகம்மை உடனுறை அருள்மிகு சுந்தரேசர் திருக்கோயிலில் விசேஷ அபிஷேக ஆராதனைகளுடன் சிறப்பு வழிபாடு நடைபெறும். தலத் திருப்பதிகப் பாராயணமும், விரிவுரையும் நிகழ்த்தப்பெறும். கலிக்காமூர்த் திருப்பதிகம் என்ற நூல் வழங்கப்பெறும். அன்பர்கள் கலந்துகொண்டு வழிபட்டு இன்புறுவார்களாக.